உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர் 25 இதழ் 44
துன்முகி-ஆவணி-1
16-8-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## குறிஞ்சி

களவில் ஒழுகுந் தலைவன் கேட்டு வரையுமாற்றால் தோழி தலைவியிடம் இற்செறிப்பை நினைவூட்டிக் கவன்றுகூறியது

யாங்குச்செய் வாங்கொ றேழி பொன்வீ, வேங்கை யோங்கிய தேங்
-கமழ் சாரற், பெருங்க ஞடனெ டிரும்புனத் தல்கிச், செவ்வாய்ப்
பைங்கிளி யோப்பி யவ்வாய்ப், பெருவரை யடுக்கத் தருவரை யாடிச்,
சார லாரம் வண்டுபட நீவிப், பெரிதமர்ந் தியைந்த கேண்மை சிறுங்கி,
யரிய போலக் காண்பேன் விரிதிரைக், கடல்பெயர்ந் தனைய வாகிப்,
புலர்பதங் கொண்டன வேனற் குரலே-259 :-கொற்றங்கொற்றனார்

தோழீ! தினையின் கதிர்கள் விரிந்த அலையையுடைய கடல் வற்றினாற் போலக் காயும் பதத்தை அடைந்தன. இனி அவற்றைக் கொய்துகொள்வதோடு நின்னையும் இல்வயிற் செறிப்பர். பொன் போன்ற பூவையுடைய வேங்கைமரங்கள் ஓங்கிய மணங் கமழுகின்ற சாரலிலே, பெரிய மலைநாடனோடு கரிய தினைப்புனத்தில் தங்கிச் சிவந்த வாயையுடைய பசிய கிளியை ஓப்பி அங்கேயுள்ள பெரிய மலையடுக்கத்து அருவியில் நீராடி மலைச்சாரற் சந்தனத்தை வண்டு விரும்பும்படி பூசிப்பெரிதும் விரும்பி இயைந்த நட்பு, இனி மிகச் சிறுகி அதுவும் இல்லையாகும்போல எனக்குத் தோன்றுகிறது.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

நல்லதண் ணீரள்ளி யுண்ணு தவரில்லை நன்மலரை
யெல்ல வருமுடிப் பாரத ஞலேன் னிரங்குதனீர்
கல்விகோள் வேண்மயில் வெற்பி லிருவருங் காடன்செட்டி
செல்வ மணிமண் டபப்படி பார்த்துத் திரும்பினரே

:-மயூரகிரிக்கோவை. 402

உரை: 'நல்ல தண்ணீர்-நல்ல குளிர்ந்த நீரை, அள்ளி உண்ணுதவர் இல்லை-அள்ளிப்பருகாதவர்கள் உலகத்திலே யாருமில்லை, நல் மலரை-நல்லபூவை, எல்லவரும்-எல்லோரும், முடிப்பார்-முடித்துக்கொள்ளுவார்கள், அதனுல் - ஆகையினுல், நீர் இரங்குதல் என்-நீவிர் வருத்தப் படுவதற்குக் காரணம் எது, கல்விகோள் - முத்திக்கதியைத் தன்னதாகக் கொண்டிருக்கிற, வேள் - முருகப் பெருமானது, மயில் வெற்பில் - குன்றக்குடி யென்னும் மயில் மலையில், இருவரும்-தலைவனும் தலைவியுமாகிய இருவரும், காடன் செட்டி-காடன் செட்டியார் அன்போடு நடத்துகின்ற, செல்வ-பொருள் மிக்க, மணிமண்டபப்படி-அழகிய மண்டபப்படியை. பார்த்து-கண்டு வழிபட்டு விட்டு, திரும்பினர்-மீண்டார்கள்' என்பதாகும்.

தனவணிக நாட்டு நடுநாயகமாக விளங்குவது குன்றக்குடித் திருத்தலம். இங்கே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பெருமான் செட்டி முருகன். நாட்டுக்கோட்டை நகரத்தார் அனைவருக்கும் பிரார்த்தனைக் கடவுளாக விளங்கி அருள்புரிபவர், இத்தலத்து மூர்த்தியே யாவார்.

வள்ளி - தெய்வயானையாகிய உபய நாச்சியாருடன், மயிலேறிய ஆறுமுகப் பெருமானாகக் கருவரையில் வீற்றிருக்கும்

பெருமானது திருவிழாக் காலங்களில் திருவீதியுலா வரும் திருவுருவமும், மயிலேறிய ஆறுமுகப்பெருமாளாகவே இருப்பதும், கருவறையிலிருக்கும் அம்மைமாரது திருவுருவங்களும் தனித்தனி மயில்களிலிருந்தே காட்சியளிப்பதும் இத்தலத்திற்குரிய சிறப்புக்களாகும்.

குன்றுதோறாடுங் குமாரவேளுக்கன்பராய்ச் செந்தமிழ் வண்ணத் திருப்புகழ்ப் பாசுரங்கள் பாடியருளிய அருணகிரி நாதரது திருவாக்காக இந்தத் திருத்தலத்திற்கு இப்பொழுது கிடைத்துள்ள பாடல்கள் இரண்டு. இவையன்றிஇயற்பாவலர்-இசைப்பாவலர் பலரால் இயற்றப் பெற்ற பிரபந்தங்கள் -தனிப்பாடல்கள் பல இத்தலத்திற்கு உண்டு. வடமொழியிலும் தென்மொழிலும் புராணங்கள் இருக்கின்றன.

முருகப்பெருமானதுஊர்தியாயிருந்த மயில், நம்மனைய மக்கள் செய்த தவத்தினால் பொருமைக் குணமுடையதாக ஒரு வேளையில் ஆயிற்று. அதனால் கல்லுருப் பெறும்படி ஆண்டவன் அதனைச் சபித்தார். அதுவே குன்றக்குடி என்னும் மயில்மலை, அதன் உருவம் மயில் போலிருப்பதைத் தெற்கு வீதியில் சரவணப் பொய்கையிலிருந்து பார்ப்பவர் இன்றும் காணலாம். இந்தத் தலத்திற்கு மயூரகிரி, மயூரபுரி, மயின்மலை, அரசவனம், கண்ணபுரம் முதலிய வேறு பெயர்களு முள்ளன.

இங்கேயுள்ள தீர்த்தம் சரவணப்பொய்கை, இது மலையின் தென்மேற்குத் திசையில் இருக்கிறது. இதன் வடகீழ்த் திசையில் மயிலாலும், குமாரக் கடவுளாலும்பூசிக்கப்பெற்ற சிவாலயமொன்று, மலையின் அடிவாரத்திலிருக்கிறது. வடக்கு நோக்கியிருக்கின்ற மயிலாகிய மலையின் தோகை தெற்கே யிருப்பதும், அதன் அடியிலுள்ள விநாயகர் தோகையடி விநாயகர் என்று வழக்கப் பெறுவதும் இங்கே நினைவு கூரத்தக்கனவாம்.

மலையின் தென்புறத்தில் மருதுபாண்டிய மன்னன் நிருமித்த மருதாபுரிக் குளமும் வடபுறத்தில் வையாபுரிச் குளமும் மேல்புறத்தில் தெப்பக்குளமும் இருக்கின்றன. இத்தலத்திற்குரிய ஆறு, தேனாறு என்பதாகும். அகத்தியமுனிவர் ஆண்டவனுக்குச் செய்த அபிடேகத் தேன் ஆறாகப் பெருக்கெடுத்து வந்து இப்பெயர் பெற்றதெனப் புராணங் கூறுகின்றது.

இங்கே வழிபாடு செய்து பேறு பெற்றவர்கள் மயில், கண்ணன்; அகத்தியர், விசுவாமித்திரர், வசிட்டர், பிரமன், கருடன், இந்திரன், சூரியன், மன்மதன், பாண்டவர், நாரதர் முதற் பலராவார்கள்.

மயூரகிரிக்கோவை 536 செய்யுட்களைக் கொண்டது. இப்பாடல்களிலுள் சொற்பொருட்சுவைகளும், ஓசையினிமை, சிலேடை, முரண், யமகம், திரிபு, மடக்கு, இலக்கண நலங்களாதியனவும் கற்பவருக்கு நல்விருந்தாயமைந்து இன்பூட்டிக்கொண்டிருக்கின்றன. இதில் மற்றைக் கோவைகளில்லாத புதுத்துறைகள் சிலவற்றையும் காணலாம்.

பாட்டுடைத் தலைவராகிய குமாரக்கடவுள், தம்மை வழிபட்டுப் பூசித்தவர்களுக்குப் புரிந்த பெருங்கருணைத் திறத்தையும், உண்மை நாயன்மாரது வாலாற்றுக் குறிப்புகளையும், சித்தாந்த சாத்திரக் கருத்துக்களையும், நீதிகளையும் இடம்நோக்கி எடுத்து விளக்குவது இவ்வாசிரியருக்கு இயல்பாய் அமைந்ததாகும். குன்றக்குடித் திருப்பணியில் பெருவிருப்பங் கொண்டு நிறைவேற்றியவரும், சிவகங்கை அரசராக விளங்கியவருமாகிய மருதுபாண்டியன் முதலிய மெய்யன்பர் பலரது திருத்தொண்டின் அருமை பெருமைகளை ஆங்காங்கே ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

இம் மயூரகிரிக் கோவையை இயற்றிய ஆசிரியர் சேது சமஸ்தான வித்துவானாயிருந்த சர்க்கரைப் புலவரின் குமாரர் சாந்துப் புலவரென்பார். இவர் திருப்புனவாயிலுக்கு மேற்கேயுள்ள சிறுகம்பையூரில் பரம்பரைத் தமிழ்ப்புலவர் மரபிற் பிறந்தார்.

சிவகங்கையை ஆண்டு வந்த பெருங்கொடை வள்ளலும், செந்தமிழ்ப்புலவரை யாதரித்த அருங்கலைவிநோதரும், திருக்கோயில்கள், அன்னசத்திரங்களாதியவற்றிற்குப் பல கிராமங்களை முற்றூட்டாகக்கொடுத்துப் பசுபுண்ணியம் பதிபுண்ணியங்களைக் கொள்ளைகொண்டுவாழ்ந்தவரும், விறலும் திறலும் மிக்க பெருவீரராய் விளங்கியவருமாகிய மருதுபாண்டிய மன்னரின் சமூக வித்துவானாகச் சாந்துப் புலவர் அவரது பதினாறுவது ஆண்டில் நியமனம் பெற்றார். அக்காளில் அவர் பாடிய அட்டநாகபந்தமென்னும் ஒரு சித்திரக்

கவியே அவருக்கு அப்பதவியை அளித்தது.

மருதுபாண்டியர் குன்றக்குடிப் பெருமானிடம் பேரன்பு பூண்டவர். ஒருசமயம் அவருக்கு உண்டாகிய இராசபிளவை, உயர்ந்த மருத்துவர்களாலும் குணப்படாதிருந்து துன்புறுத்தியது. அப்போது ஒரு பெரியவர் அவரிடம் 'அரசே! கலியுக வரதனாகிய முருகப்பெருமானது மெய்யன்பர்களில் ஒருவர் திருநீறு போட்டால் இப்பிளவை குணமாகும்' என்று சொல்ல அதுகேட்ட மன்னர் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் முருகனிடத்துச் சிறந்த அன்பு பூண்டவர்களென்பதை முன்னமே கேள்வியுற்றிருந்தவராதலால் அவர்களுள் எவரையேனும் அழைத்துவருக என்று உத்தரவிட்டார்.

உத்தரவுப்படி சென்ற ஏவலாளர் வாணிப நிமித்தமாகப் புறப்பட்டு வந்து எதிர்ப்பட்ட ஆத்தன்குடிக் காடன் செட்டியாரை அழைத்து வந்து பாண்டியன் முன்புவிட, அச்சக்குறிப்புடன் காணப்பட்ட அவரைப்பாண்டியனார் அன்புரைகள் கூறி, முருகப்பெருமானைப் பிரார்த்துத் திருநீறு போடும்படி வேண்டினார். செட்டியார் குன்றக்குடி முருகனைச் சிந்தித்துத் திருநீறு போட்டார். அன்று இரவு பல நாட்களாக உறக்கமில்லாமல் வருந்திய மன்னர் நன்றாகத் தூங்கும்பொழுது 'இளந்துறவியொருவர் வந்து பிளவையைப் பிதுக்கி ஆணியெடுத்துவிட்டு அதில் திருநீறு வைத்ததாகக் கனவுகண்டு விழித்துப் பார்க்கக் கனவுச் செயல் நனவுச் செயலாகவேயிருந்தது.

முருகன் திருவருளுக்கு மகிழ்ந்து, செட்டியாரின் அன்புக்கு வியந்து அன்றுமுதல்அவரது குலதெய்வமாகிய குன்றக்குடி முருகனையே தனது ஆன்மநாயகனாகக் கொண்டு அந்தத் தலத்திற்கு வந்து ஆண்டவனை வழிபட்டுப் பல திருப்பணிகளை அரசர் செய்தார். அவரது திருவுருவம் மலையின் மேலுள்ள கோயிலில், திருவீதியிலெழுந்தருளிவரும் ஆறுமுகப் பெருமான் சந்நிதியில் கைகூப்பிக் கொண்டு நிற்பதை இன்றும் காணலாம்.

மருதுபாண்டியனாரின் வேண்டுகோளின்படியே மயூரகிரிக் கோவை இயற்றப்பெற்றது.

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

சென்னை ராஜ்யத்தின் கவர்னராயிருந்து வரும் வடவராகிய ஸ்ரீ பிரகாசாவும் 'இந்து என்று கூறும் சொல் தவருனது என்றும் சனுதன தர்மம் என்று தான் கூறவேண்டும் என்றுபேசியிருக்கிருர்' (5-1-56 தமிழ்நாடு). ஆனல் சனுதன தர்மம் என்றுதான் கூற வேண்டும் என்ற பகுதியில் அவருந் தவறினர். 'இது (சனுதன தர்மம்) ...முன்னிருந்த காலத்து மதங்களைப்பற்றி இருட்டடிப்புச் செய்வதாகும். ...சிவமத(த்தினதும்) ....ஆசிரியர்களி(னதும்) புகழையெல்லாம் மறைப்பதாகும். சனுதன தர்மம் என்(ற) ...இந்த வார்த்தை எந்த சம்ஸ்கிருத அகராதியிலும் இல்லாத தொன்ருகும். அண்மையில் உருவான சொல்லாகும் இது. எனவே பெரும் குழப்பம் மக்களிடையே உண்டாகியிருக்கிறது. மதுரை போன்ற இந்தச் சிவமதத்தைச் சேர்ந்த நாட்டவர்கள் இதை அகற்றவேண்டியது அவசியமாகிறது' (5-1-56 தமிழ்நாடு) என்கிருர் ஜான்ஸ்பியர்ஸ் என்பவர். சனுதன தர்மமதம் என்பது போன்று பிராமண மதம் (Bhraminism) முதலிய மிலேச்ச சிருட்டி நாமங்களும் புராதன சமயங்களை இருட்டடிப்புச் செய்வனவே. அங்ஙனமாக அவ்வச் சமயத்துக்கே தொன்றுதொட்டு உரியதாயிருந்து வருகிற பெயரை விலக்கியும், மானக்கேட்டைத் தரும் பொருளுடையதாய் அல்லது பொருள் தெரியாததாயுள்ளதொரு பதத்தை மதப்பெயராக்கித் தம் மனதில் தோன்றிய பொருள்களையெல்லாம் அப்பெயருட்புகுத்தியும் சமயப்ரசாரஞ் செய்துதிரிகிறநாடோடி வாயாடிகள் இக்காலத்தில் மலிந்துவிட்டனர். தாம் பிரசாரஞ்செய்யுஞ் சமயம் இதுதானென அவருக்கே தெரியாது. அப் பிரசாரங்களைக் கேட்கும் மக்களினறிவும் மருளுகிறது. அங்ஙனம் நாட்டை நாசப்படுத்துகிருர் அப் பிரசாரகர். ஜான்ஸ்பியர்ஸ் சொன்னதைக் கேட்டாய்க்காவது அப்பதடிகள் பயனில பாரித்துரைக்குந் தம் உரையை விடுத்துத் திருந்துவாரா?

ஹிந்து என்னும் மதம் தனக்கெனத் தெய்வமோ, ஆசிரியரோ, பிரமாண நூலோ, கொள்கையோ இல்லாதது. அதனாலன்றோ இந்நாட்டில் தோன்றிய பல மதங்கள் தம்மையே தனித்தனி அம்மதமென்கின்றனர். அகம்பிரமவாதி தன்மதமே ஹிந்துமதமென்கிறான். வைணவன் தன்மதமே ஹிந்துமதமென்கிறான். சைவனுந் தன்மதமே ஹிந்துமதமென்கிறான். அப்படியே பிறருஞ் சொல்கின்றனர். இன்னொரு மடவோன் அவையனைத்துமே ஹிந்துமதந்தான் அவற்றுட் பேதமில்லை யென்கிறான். அம்மட்டோ? பௌத்தமதம் ஆத்யந்தம் நாஸ்திகம். அது மாணிக்கவாசகர் முதலியோரால் அன்றே இந்நாட்டிலிருந்து துரத்தப்பட்டது. இன்று அதன் நாத்திகக் கொள்கையை மறைக்கமுயல்கிறார் சிலர். அவருள் இராஜாஜியும் ஒருவர். அவர் வைணவர். அவரின் சமயக் கடவுளாகிய விஷ்ணுவே புத்தாவதாரமெடுத்தார். அவர்தான் ஆதிபுத்தர். 'உலும்பிலி வனத்து ளொண்குழைத் தேவி-வலம்படு மருங்குல் வடுநோயுறும,ன்றேனவ்வழித்தோன்றின னதலி-னின்றே ளேழாநாளின்னுயிர் வதைத்தான்' என்றது விம்பசாரகதை. 'மூத்தாம் புத்தர் தோன்றித் தாய்ப்பழுவை முறித்தே விட்டார் - கொத்து வாழ் குழலா ளாகுங் குண்டலகேசி தானுங்-கத்திருவுங் கணவனக் காடனையுங் கொன்றிட்டா-ரித்துணையா ரிருவரும்வங் கிங்ஙனே தவமுரைப்பர்' என்றது புத்தர் சித்தாந்தத் தொகை. 'இவன் பிறக்கின்ற காலத்து மாதாவினது வலமருங்குலாற் பிறந்தான். அவளும் ஆறுநாட் குற்றுயிரோடு கிடந்து எழாம் நாள் இறந்தாள். இது புத்த மாதாக்கள் யாவருக்கும் ஒக்கும்' என்றது நீலகேசித் தெருட்டு-குண்டலகேசி வாதச் சருக்கம். 'புத்தன்றாய் நண்டிப்பி வாழை புனமூங்கில், கத்தும் விரியன் கடுஞ் சிலந்தி - யித்தனையும், வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு' என்றது லோகவசனம் என்னும் நூல். அயோசிஜன் என்ற பட்டத்துக்கு ஆசைப்பட்ட அப்புத்தர் தாய்கருவுட் கிடந்தபோது அவளது யோனிவழி வரமறுத்துத் தாய்க்கொலை நேர்ந்தாலுங் குற்றமில்லையெனக் கொண்டு அவளது விலாவைப் பிளந்து வெளிவந்தாராம்- அவளும் எழாம்நாள் இறந்தனளாம்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி ஆவணி-1

## ஆட்சிமொழி

சென்னை மாநில அரசியல் ஆட்சிமொழியாகக், கூடிய விரைவில் தமிழைச் சொல்முவர அரசாங்கம் முடிவு செய்திருக்கிற செய்தியைச் சட்டசபை-மேல் சபைக் கூட்டுக் கூட்டத்தில் கவர்னர் திரு, ஸ்ரீபிரகாசா அறிவித்துள்ளார் இது, பெரிதும் மகிழ்ச்சிக்குரியதும் வரவேற்கத் தக்கதுமான செய்தியாகும்.

தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சி மொழியாயிருத்தல் வேண்டுமென்பதற்கு திரு, கசபதிநாயகரவர்கள் சென்னை மேல்சபையில் முன்னர் முயன்ற முயற்சி, அரசினர் ஆதரவின்மையால் அப்போது தோல்வியுற்றது. அதுகண்டு மனங் கோதித்து வருந்திய தமிழன்பர்கள் பலருக்குக் காலங் தாழ்ந்த இப்பொழுதேனும் பயன் வருவது மகிழ்ச்சி உண்டாக்காமல் இருக்காது.

**1949**ம் ஆண்டில் ஏற்பட்ட இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் **345**வது பிரிவு, ஒரு மாகாணத்தில் வழங்கிவரும் ஒரு மொழியையோ அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட மொழிகளையோ அரசாங்க அலுவல்கள் அனைத்திற்குமாயினும் அல்லது குறிப்

பிட்ட ஒன்றிற்காயினும் பயன்படுவதற்கு மாகாண அரசாங்கம் சட்டமியற்றிக் கொள்ளலாமென அநுமதித்திருக்கிறது. இச்சட்டம் தோன்றி ஏழுஆண்டுகளுக்குப் பிறகாவது, தமிழ்நாடு இதனுலாகிய பயனைப்பெற வாய்த்த வாய்ப்பு உயர்ந்ததுதான்.

இனித் தமிழை ஆட்சிமொழியாகக்கொள்ள இருக்கிற நமது மாநிலம் எஞ்சிய சென்னையாயிராமல் 'தமிழ்நாடு' என்றே அழைக்கப்பெறும் பேற்றைப் பெறுதல் வேண்டும். இந்தியப் பாராளுமன்றம் மாகாணப் புனரமைப்புக்குழுவினரது அறிக்கையைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கிற இவ்வேளையில் 'எஞ்சிய சென்னை என்பதைத் தமிழ்நாடு என்று மாற்றிக் கொள்ளும்படி வற்புறுத்த வேண்டிய பொறுப்பு, தமிழை ஆட்சிமொழியாக்கச் சட்டமியற்ற முன்வந்துள்ள அரசாங்கத்துக்கு உண்டு என்பதை நாம் எடுத்துச் சொல்லவேண்டுவதில்லையல்லவா?

ஆகவே, வரும் அக்டோபர் மாதத்தில் உருவாக இருக்கும் புதிய மாகாணங்களில் தமிழ் ஆட்சிமொழி மாகாணம் தமிழ் நாடாயிருக்கவேண்டு மென்பதைப் பற்றி நமது சென்னை அரசாங்கம் அக்கறையெடுத்துக் கொள்ள வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறோம்.

நமது மாநிலத்தைத் 'தமிழ்நாடு என்று அழைக்கப் பிடிவாதமாக மறுக்கின்ற மத்திய அரசாங்கத்தின் போக்கை மாற்ற மாநில அரசியல் முயற்சி எடுத்தேயாக வேண்டும்.

தமிழ் மக்களின் மனமகிழ்ச்சிக்குரிய தமிழாட்சிமொழிச் சட்டத்தைக் கொண்டுவரப் போவதாகத் தமிழரல்லாத ஸ்ரீபிரகாசா சொல்லித் தமிழ் மக்களின் பெருவாரியான பாராட்டுதலைப் பெற்றுவிட்டாரென்பதே நமது கருத்தாகும். இதுபோலவே, தமிழ் மக்களுக்கு வேண்டிய இன்றியமையாத பிற நலங்களையும்கிடைக்கும்படிசெய்ய நமது மாநிலக்கவர்னர்முயற்சியெடுத்துக் கொள்ளவேண்டுமென்றும் வேண்டுகிறோம்.




தேவகோட்டை திரு தி ராம தி சுப. பழ. பழநியப்ப செட்டியார் அவர்களுக்கு 13-8-56ல் சிவாக மோக்த உக்ர ரத சாந்தி காளை யார்கோவிலில் சிறப்பாக நடை பெற்றது. சிவபுண்ணியச்செல்வ ரான அவர்களுக்கு நீண்ட வாழ் நாளும், பிறநலங்களுமுண்டாக ஆண்டவனை வேண்டுகிறோம்.

---

## தமிழ் ஆட்சி மொழியாகும்

சென்னை ஆக 8-

'இந்திய அரசியலமைப்பின் 345 ஆவது பிரிவுப்படி விரை வில் தமிழை, சென்னை அர சாங்க ஆட்சி மொழியாக்க மாகாண அரசாங்கம் உத்தேசித் திருக்கிறது' என்று சென்னை கவர்னர் திரு. ஸ்ரீ பிரகாசா இன்று அறிவித்தார்.

சென்னை சட்டசபை, மேல் சபை ஆகியவைகளின் கூட்டுக் கூட்டத்தில், கவர்னர் தொடக் கச் சொற்பொழிவாற்றுகையில் மேற்கண்டவாறு அறிவித்தார்.

'மாகாணப் புனரமைப்பால் சென்னை மாகாணத்தில் தமிழ் மொழி பேசுவோர் தொகையே மிகப் பெரும்பாலானதாய் இருக் கும்; ஆகையால் அரசாங்க மொழியை ஆங்கிலத்திலிருந்து தமிழாக மாற்றுவதற்கான நல்ல வழிகளைப் பற்றி அரசாங்கம் ஆலோசனை செய்துகொண்டி ருக்கிறது' என்றும் கவர்னர்கூறி னர்.

## இந்துமதக் கோவில் சொத்துக்கள்

சென்னை ஆக 13-

இந்துமதக் கோவில்களின் சொத்துக்களை இரண்டாம் ஐந் தாண்டுத் திட்ட வேலைகளுக்கா கப் பயன்படுத்தும் நோக்கம் சென்னை அரசாங்கத்திடம் இல்லை என்று அறநிலைய அமைச் சர் திரு பரமேசுவரன் இன்று கூறினர்.

இரண்டாம் திட்டத்தின் கீழ் கல்வி சம்பந்தமான திட்டங் களுக்காக இந்துமதக் கோவில் களில் இருந்து கிடைக்கும் நிதி

யில் ஒரு பகுதியை உபயோகப் படுத்துவது பற்றி கல்வி அமைச்சர் துறை சென்னை அரசாங்கத்தை ஆலோசனை கேட்டது என்றும், மத, தர்ம தாபனங்களில் இருந்து கிடைக்கும்நிதியை அகில இந்திய அடிப்படையில் உபயோகப்படுத்துவது சம்பந்தமாக திட்டக் குழுவிடமிருந்து ஒரு திட்டம் வந்தது என்றும் அவர் கூறினர். மத்திய அரசாங்கத்தின் முடிவை சென்னை அரசாங்கம் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகவும் அவர் கூறினர்.

## நம்பியாரூரர் திருநாள்

தேவகோட்டை ஆக 29-நேற்றுதினம் சன்மார்க்க சங்கத்தில் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருநாள் கொண்டாடப் பெற்றது. மாலையில் நகரச் சிவாலய மகாமந்திரோபதேச மண்டபத்தில் பள்ளத்தூர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் பண்டித, 'மு. முத்துவேங்கடாசலமையர் சுந்தரர்' என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினர்கள்.

## திருப்பூர்

சிவாலயத் திருப்பணி நிறைவுச் சிலாசாசனத் திறப்பு விழா 19-8-56 மாலை 4மணிக்கு நகரத்தந்தை திரு கே எஸ் இராமசாமிக்கவுண்டரவர்கள் தலைமையில்,பொள்ளாச்சி எ பி டி நிர்வாகர் திரு, என் மகாலிங்கம் பி எஸ் ஸி எம் எல் ஏ அவர்களால் நிகழ்த்தப்பெறும்.

மாலை 6-மணிக்குச் சிவாகம ஞானபாநு சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகள் தலைமையில் பாலகவி இராமநாதன்செட்டியார் 'ஆலயத்திருப்பணி' என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றுவார்கள். அருள்நெறி வாரவழிபாட்டுத் திருக்கூட்டச் சார்பில் தேவாரத் திருமுறை வகுப்புத் தொடங்கப்பெறும்.




## தங்கம், வெள்ளி

| மதுரை | ஆக-13 | |
|---|---|---|
| பாட்லா | 105 | 5 0 |
| சவரன் | 68 | 0 0 |
| செடிமேட் தங்கம் (சவரன் எடை) | 66 | 8 0 |
| வெள்ளி 100தோலா | 176 | 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 0 |

(5ம் பக்கத் தொடர்ச்சி)

மன்னரின் உயிர்நண்பராக விளங்கிய காடன் செட்டியார் முருகப்பெருமானுக்குச் செய்யும் மண்டபப்படியை மேற்கண்ட பாடலில் வைத்துச் சிறப்பித்துள்ளார் ஆசிரியர்.

களவிற் புணர்ந்த தலைவியும் தலைவனும் தலைவனது ஊருக்குச் சென்றுவிட்டனர். தலைவியைப் பிரிந்த வருத்த மிக்கவளாய்ச் செவிலி அவளைத் தேடிச் செல்லுகின்றாள். வழியில் எதிர்ப்பட்டவர்கள், கற்பொடு புணர்ந்த தலைவியின் செயல் பொருத்தமானதென்று சொல்லிச் செவிலியை மீண்டு செல்லும்படி கூறுகிறார்கள். அதன்படி மீண்டு வந்த செவிலி, உடன்போக்கை நற்றாய்க் குணர்த்திப்பாங்கியர்க் குணர்த்துகிறாள். கேட்ட பாங்கியர்பிரிவுக்கு வருந்துகிறார்கள். அப்பொழுது செவிலி கூறும் கூற்றாயமைந்தது மேற்கண்ட பாடல்.

தலைவியைத் தலைவனும் தலைவனைத் தலைவியும் கூடி நுகரும் இன்பத்தைஇரண்டுஉண்மைகள் காட்டி இங்கே செவிலி விளக்குகிறாள். ஒன்று தலைவிக்கும் மற்றொன்று தலைவனுக்குமாகக் கொள்வது பொருத்தமாயிருக்கும். ஆணை நுகர்பவளாகவும் பெண்ணை நுகர்ச்சிப் பொருளாகவும் பேசுவது, தொன்று தொட்டுவருகின்ற மரபு.

அந்தமுறையில் தலைவியைப்பருகும்நீராக்கிஅதுநல்லதும்,குளிர்ந்ததுமாமென்று கூறுகின்றாள் செவிலிநன்மைதலைவியினது அக அழகையும், தண்மை அவளது புறஅழகையும் புலப்படுத்தி ஒப்புயர்வற்றவள் அவளென்பதை உணர்த்திக்கொண்டிருக்கின்றன மலர்சூடுதல் மங்கையர்க்கு இயல்பாதலின் தலைவனை மலராக்கி அவனது அருளுள்ளப் பண்பை நன்மலர் என்பதாற் புலப்படுத்தி அவர்களுடைய நெறி, செந்நெறியே என்பதைப் பெறவைத்து, அதற்காக இரங்குதல் கூடாதென அறிவுறுத்தும் செவிலியின் சதுரப்பாட்டுப் பேச்சில், காடன் செட்டியார் மண்டபப்படிக் காட்சி தலைவன் தலைவியருக்குக்கிடைத்த செய்தியும் இடம்பெற்றுவிட்டது.

## 'தமிழ்நாடு' என்ற பெயர் கூடாதாம்!

புதுடில்லி ஆக 9-

சென்னை மாகாணத்திற்குத் தமிழ்நாடு என்று பெயரிட வேண்டுமென்ற யோசனையை இந்திய உள்நாட்டுத் துறை

அமைச்சர் பண்டித பந்த் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

அதேபோன்று மைசூருக்குக் கர்னாடகம் என்று பெயரிட வேண்டுமென்ற யோசனையையும் அவர் ஏற்க மறுத்தார்.

**கன்னியாகுமரி**
**தனி மாவட்டம்**

புதுடில்லி ஆக 10-

திருவாங்கூர்-கொச்சிப் பகுதியிலிருந்து சென்னையுடன் இணைக்கப்படும் அகஸ்தீசுவரம், தோவாளை, கல்குளம், விளவங்கோடு ஆகிய நான்கு தாலுகாக்களும் சேர்ந்து தனி மாவட்டமாக்கப்படும். அதற்கு கன்னியாகுமரி மாவட்டம்' எனப் பெயரிடப்படும் என்று உள்நாட்டு அமைச்சர்கொண்டுவந்த திருத்தத்தை மக்கள் சபை ஏற்றுக் கொண்டது.

# லோகமான்ய திலகர்

[தியடோர் எல். ஷாய்]

டாக்டர் ஷாய் ஓர் அமெரிக்க ஆராய்ச்சி அறிஞர்; அவர் தற்சமயம் இந்தியாவில் இருக்கிறார். திலகர் அரசியல் தத்துவத்தைப் பற்றி *The Legacy of Lokamanya* என்னும் புத்தகத்தை டாக்டர் ஷாய் இப்போழுது எழுதி முடித்திருக்கிறார். அது பம்பாய, ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழக அச்சக வெளியீடாகும்.

பாரதப் புதல்வர்களில் தலை சிறந்த ஒருவரான பால கங்காதர திலகர், 1856ல் ஜுலை 23ல் மஹாராஷ்டிராவில் ரத்னகிரி ஜில்லாவில் பிறந்தார். இந்த ஆண்டு அவர் நாடு அவர்பிறந்த நாளின் நூறுவது ஆண்டு விழாவைக் கொண்டாடுகிறது. இவ்விழா அவருக்கு ஏற்ற மரியாதை செய்வதாகும்; அவர் வாழ்க்கையும், பணியும், தியாகமும் எல்லாம் இந்தியாவுக்கே ஈடுபட்டவை; நாட்டு மக்கள் தம் முன்னேரிடமிருந்து பெற்றுள்ள செல்வத்துள் அவையும் சேர்ந்து விட்டன. எனினும் விடுதலை இயக்கத்தின் தலைவராம் இவருடைய நினைவைப் போற்றுவதுமட்டும் போதாது. சரித்திரச் சிறப்பு வாய்ந்த ஒருவர் என்று மட்டும் அவரை எண்ணுவது போதாது, திலகர் பெரியவர் என்னும் புகழ் பெற வேண்டுமாயின், அவருடைய போராட்டத்தின் படிப்பினைகள் தொடர்ந்து முக்கியமாக இருந்து வர வேண்டும். அவர் சிந்தனையும் போதனையும் 1896 அல்லது 1916ம் ஆண்டு உலகத்துக்குப் பொருந்தியது போல் 1956ம் ஆண்டு உலகத்துக்கும் பொருந்த வேண்டும். இதனை இன்னொரு வகையாய்ச் சொன்னால், பெரியார் ஒருவர் விட்டுச் செல்லும் ஞானமும் சிந்தனைச் சுடரும் வெறும் சரித்திரகாலச் சிறப்புடன் மட்டும் நில்லாமல் அதனையும் கடந்து நிலைபெறும். இது லோகமான்ய திலகருக்கு மிகமிகப் பொருந்தும்; இந்தியாவின் லோகமான்யர் அவர் ஒருவரே.

லோகமான்யர் கொடுத்துச் சென்ற சொத்து சுயராஜ்யம்

என்று ஒரே சொல்லில் சுருங்கச் சொல்லப்பட்டுள்ளது. இம் மாபெரும் குறிக்கோளுக்காக வாழ்ந்ததே அவர் வாழ்க்கை. அவர் நாளில் இந்தியத் தலைவர்கள் பெரும்பாலோர் தாங்கிய துன்பங்களைக்காட்டிலும் மிகப் பெரிய இன்னல்களையும் இடையூறுகளையும் அவர் பொறுத்தார் அவை இந்தியாவின் சுதந்திரத்துக்கு உதவும் என்னும் நம்பிக்கையோடு அவர் அவற்றை மனமாரத் தாங்கிக் கொண்டார். இந்தியா விடுதலை எய்திய நாளைக் காணும் வரை அவர் இருக்கவில்லை. இது காந்திஜியின் பாக்கியம் ஆயிற்று. ஆனால் இந்தியப் போராட்டத்தின் குறிக்கோள் இன்னது என்று வரையறை செய்தார் திலகர்; அதற்கு சுயராஜ்யம் என்று பெயரிட்டவர் அவரே. அப் போராட்டத்துக்குப் பகிஷ்காரம், சுதேசி, தேசீயக் கல்வி, மக்கள் ஐக்கியப்பட்ட அஹிம்சை முறை அரசியல் நடவடிக்கை ஆகிய முறைகளை முதன்முதல் வகுத்துக்கொடுத்தவர் திலகரே; இவையே குறிக்கோள் நிறைவேறுவதற்கு உதவின. இந்திய தேசீயக் காங்கிரஸை சுயராஜ்ய இயக்கத்தின் முன்னணி ஸ்தாபனமாக்கியவர் திலகரே. விடுதலை இயக்கத்துக்கும் அதன் வழியாய் சுயராஜ்யத்தோடு பிறக்கும் சுதந்திர நாட்டுக்கும் உள்ள அரசியல் தத்துவத்தின் பொதுப் படையான வரையறைகளை அமைத்துக் கொடுத்தவரும் திலகரே.

சுயராஜ்யம் என்னும் அவருடைய கனவைக் காங்கிரஸும் நாடும் காந்திஜியின் தலைமையில் நனவாக்கின. ஆயினும் காந்திஜி லோகமான்ய திலகர் அமைத்த அடிப்படையின் மேலேதான் செயலாற்றினர். அதனால்தான் அவரைத் 'தற்கால இந்தியாவை ஆக்கியவர்' என காந்திஜி கூறினர்.

இந்தியாவுக்கு சுயராஜ்யம் என்பது சுயநிர்ணய உரிமைக்குரிய தேசீய ஆவலை நிறைவேற்றிக் கொள்வது மட்டும் அல்ல. பிறப்பிலே இந்திய மயமான ஒரு அரசியல் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதாகும் அந்த சுயராஜ்யம். இந்திய நாகரிகத்தின் வாழ்க்கைத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது அது. அந்தப் புராதானத் தத்துவத்துக்கும் தற்கால அரசியல் உலக நடப்புகளுக்கும் பாலமாக அமைந்தவர் திலகர்.

(தொடரும்)

## உங்களுக்குத் தெரியுமா?

1955-56ல் இந்தியாவிலிருந்து 10.72கோடி ரூபாய்மதிப்புள்ள 9.21 லட்சம் டன் மாங்கனீஸ் கனி ஏற்றுமதியாயிற்று.

இந்தியாவில் 1955-ல் 6,28,500 ரூபாய் மதிப்புள்ள எண்ணெய் ஆலை யந்திர சாதனங்கள் தயாரிக்கப்பட்டன.

பங்களூரிலுள்ள ஹிந்துஸ்தான் விமானத் தயாரிப்பு விமானத் தயாரிப்பு ஸ்தாபனத்தில் 1956ல் இதுவரையில் 'ஹெச்டி 2' விமான ரகத்தைச் சேர்ந்த 17 விமானங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

## "சந்தா - நேயர்களுக்கு"

அன்புடையீர்!

சந்தாப்பாக்கி விஷயமாகப் பாக்கியுள்ள அன்பர்களுக்கு இரண்டு கார்டுகள் எழுதியும், விளம்பரங்கள் வெளியிட்டுத் தெரிவித்தும் இன்னும் ஒருசிலர் அனுப்பாமலே இருந்து வருகிறார்கள். அவர்களுக்கு நமது இதழை V P P யில் அனுப்பிவைக்க முடிவுசெய்துள்ளோம். அதற்குப் பணம்கட்டிப் பாக்கிதிரும்படி செய்ய அவர்களை வேண்டிக்கொள்ளுகிறோம்.

அன்புள்ள,
அமைச்சர்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை-செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர் 25 இதழ்-45
துன்முகி-ஆவணி- 8
23-8-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## மருதம்

பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்த தலைவன் தழுவுதலும் உடன்பட்டாள் போன்றிருந்து ஊடல்நீங்காது கூறியது.

கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை, பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத், தண்டுசேர் மள்ளரி னியலி யயலது, குன்றுசேர் வெண்-மணற் றுஞ்சு மூர, வெய்யை போல முயங்குதி முனையெழத், தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன், மலிபுனல் வாயி லிருப்பை யன்னவென், ஞெலிபல் கூந்த னலம்பெறப் புனைந்த, முகையவிழ் கோதை வாட் டிய, பகைவன் மன்யான் மறந்தமை கலனே-260 :-பரணர்

கழுநீர்ப்பூவை மேய்ந்த பெரிய காலையுடைய எருமை வயலிலே படர்ந்த தாமரையின் குளிர்ந்த பூவைத் தின்பதற்கு வெறுத்து விட்டுத் தடிகைக் கொண்ட வீரரைப்போல நடந்து பக்கத்திலேயுள்ள மலைபோலக் குவிந்த வெண்மணலின்மீது உறங்குகின்ற ஊரனே! விருப்பமுடையாய்போல என்னைத் தழுவுகின்றாய். பகைமை மிகுதலால் எதிர்த்துவந்த பகைவரை அழித்த செவ்வேலையுடைய வீரனாகிய 'விராஅன்' என்பவனது நிறைந்த புனல் வாயிலையடுத்த இருப்பையூர் போன்ற எனது தழைத்த பலவாகிய கூந்தல் அழகு பெறும்படி புனைந்த அரும்புமலர்ந்த பூமாலைவாடும்படி செய்த பெரும்பகைவனல்லனோ நீ? நின் செய்கையை நான் மறந்திருப்பேனல்லேன்.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

அண்டர்போய் வாழ்வையு மயன்போய் வாழ்வையும்
விண்டுவின் வாழ்வையும் வேஃகி லேனியான்
தண்டைக ளணிந்தநின் சரணத் தன்பையே
கோண்டிட வேண்டுவ னேன்று கூறினன்

:-கந்தபுராணச்சுருக்கம் 225

உரை:– 'அண்டர் - தேவர்களது, பொய் வாழ்வையும்- பொய்யான வாழ்க்கையையும், அயன்–பிரம தேவனது, பொய் வாழ்வையும்–பொய்யான வாழ்க்கையையும், விண்டுவின் வாழ்வையும்- திருமாலினதுவாழ்க்கையையும், வெஃகிலேன் யான்- நான் விரும்பவில்லை, தண்டைகள் அணிந்த - தண்டைகளை அணிந்திருக்கிற,நின் சரணத்து அன்பையே - நினது திருவடிகளின்பால் வைக்கும் அன்பையே, கொண்டிட-அடியேன் கொண்டு வாழ, வேண்டுவன் என்று- வேண்டுவேன் என்று, கூறினன்-வரங்கேட்டான்' என்பதாகும்.

சிவபெருமானது முக்கண்களைப்போல விளங்குகின்ற திருத்தொண்டர் புராணம், திருவிளையாடற்புராணம், கந்தபுராணம் ஆகியவற்றுள், கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளது மதுரக் கனியும் செந்தமிழ்த் திருப் பாடல்கள் 10345ஐக் கொண்டு இயலுவது மூன்றாவதாகிய கந்த புராணம் ஆகும்.

முக்கட் பரம் பொருளினது நெற்றிக் கண்ணெருப்பிலிருந்து தோன்றிய முருகப்பெருமான், உறுநர்த்தாங்கிச் செறுநர்த் தேய்த்த செய்தியைப்பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய வட மொழிக் காந்தபுராணம் விரித்துச் சொல்லுகிறது. சனற் குமார சங்கிதை, சூத சங்கிதை, பிரம சங்கிதை, விட்டுணு சங்கிதை, சங்கர சங்கிதை, சூர சங்

கிதை என்னும் ஆறுபிரிவுகளைக் கொண்ட அப்புராணத்துள் ஐந்தாவதாகிய சங்கர சங்கிதை பன்னிரண்டு கண்டங்களைக் கொண்டது.

அவற்றுள் சிவரகசிய கண்டம் முதன்மையானதாய்ப் பதின் மூவாயிரம் கிரந்தங்களையுடைய தாய் உற்பத்திகாண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்தகாண்டம், தேவ காண்டம், தக்ஷகாண்டம், உபதேச காண்டம் என்னும் எழு காண்டங்களைக் கொண்டதாய் இலங்குவது. அவைகளில் முதல் ஆறுகாண்டங்களையும் தமிழில் கந்த புராணம் என்னும் பெயருடன் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் மொழிபெயர்த் தருளினார்கள்.

கலியுக வரதனாகிய முருகப் பெருமானது கருணைப்பெருக்கை மக்களுக்கு வாரி வழங்கிக், கருக்கடல் முருக்கி முத்திக் கரைதனில் சேர்க்கவல்லதாகிய கந்தபுராணம், சைவ நன்மக்களது பாராயணப் பெருநூலாகப் பண்டுதொட்டுப் பயிலப் பெற்று வருகின்றது. ஒவ்வோராண்டிலும் கந்தசட்டித் திருநாட் காலத்தில் கந்தபுராணம் முழுவதையும் பாராயணம் செய்து முடிக்கின்ற நியதியுடைய மெய்யன்பர் பலர் உள்ளனர்.

ஆயிரக்கணக்கான பாடல்களையுடைய கந்தபுராணத்தை, ஆறுநாட்களுக்குள் பாராயணஞ் செய்து முடிப்பதன் அருமையை நோக்கிச் சம்பந்த சரணாலய சுவாமிகள் கந்தபுராணச் சுருக்கம் என ஒரு நூலை ஆக்கியருளினார்கள். இது 1048 பாடல்களையே உடையதாய்இருந்தாலும் முதனூலாகிய கந்தபுராணத்துப் பொருள்களை உணர்த்துவதில் எந்த வகையிலும் குறைந்ததாயில்லை யென்பது உணரத்தக்கதாகும்.

இந்நூலாசிரியராகிய சம்பந்த சரணாலய சுவாமிகள் தருமபுர ஆதீனத்தில் ஆறுவது குரு மூர்த்திகளாக எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்த தேசிக சுவாமிகளிடம் ஞானோபதேசம் பெற்றுத் துறவுச் செல்வராய் ஒழுகியவர். ஆதி குமாகுருபர சுவாமிகளின் நன்மாணவராயும் இலக்கண- இலக்கிய -தருக்க சித்தாந்த சாத்திரப் பேரறிஞராய் வடமொழி தென்மொழி வல்லுநராயும் விளங்கியவெள்ளியம்பலவாணமுனிவரிடம்பாடங் கேட்டவர்.

தமது ஞானாசிரியரது திருவடிகளில் இடையறாத அன்பு பூண்டவர் இவர் என்பதை ‘சம்

பந்த சரணாலயர் என்ற அவரது திருநாமம் நன்கு புலப்படுத்திக் கொண்டிருக்கிறது. மேலும் நூலுட் பலஇடங்களில் தருமை ஆதீன முதல்வராகிய குருஞான சம்பந்தர், அவரது குருவாகிய கமலை ஞானப்பிரகாசர், நூலாசிரியரின் ஞானாசிரியராகிய திருஞானசம்பந்த தேசிகர் ஆகியோரது பெருமைகள் பாராட்டப் பெறுகின்றன.

சுவாமிகளது நூற்புலமையும், சிவஞானமும், துறவொழுக்கமும் தமிழ்நாட்டவரை மட்டுமன்றிப் பக்கத்திலேயுள்ள மற்ற நாட்டவரையும் வசப்படுத்தி அன்புகொண்டு பாராட்டச்செய்தன. அந்நாளில் மைசூரை ஆண்டுகொண்டிருந்த மன்னர், தமிழ்நூல்களைப் பயின்று நல்லறிவு பெற்றிருந்தாராதலின், சுவாமிகளைத்தரிசித்துஅவரோடு பழகவேண்டுமென விரும்பித் தக்கார் வாயிலாகத் தமது கருத்தைச் சுவாமிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டார்.

ஞானாசாரியரின் அநுமதி பெற்றுச் சுவாமிகள் மைசூருக்கு எழுந்தருளினார்கள். சுவாமிகளது தவவொழுக்கமும் தமிழ்ப் புலமையும் மன்னருக்குப் பெருவியப்பை உண்டாக்கின. முருகப்

பெருமானது பெருங் கருணை
திறத்தைக் கந்தபுராணத் திரு
பாடல்கள் சிலவற்றைத் துணை
கொண்டு சுவாமிகள் மன்ன
ருக்கு எடுத்துச் சொல்ல, "வி
வாயிருக்கும் கந்தபுராண வ
லாற்றைச் சுருக்கிச் சொல்லு
நாலொன்று இன்றியமையாத
வேண்டப்பெறுவதாகும். அ
னைத் தேவரீரே இயற்றியருள
தல் வேண்டும்" என அரச
சுவாமிகளிடம் வேண்டினர்.

சுவாமிகள், முருகப்பெரும
னது திருவருளுக்கு வியந்து
கந்தபுராணச் சுருக்கத்தை
பாடிமுடித்து, திருச்செந்தூரை
அடைந்து, செந்திலாண்டவன்
சந்நிதியில் மைசூர் அரசர் முன்
னிலையில் அரங்கேற்றினார்
சுவாமிகளது திருவாக்கில் பெரி
தும் ஈடுபட்ட அரசர் பொன்னை
யும் மணியையும் அவருக்குக்
காணிக்கையாக அளிக்க அவற்
றைக் 'குருமூர்த்திகளுக்காகுக
என்று சுவாமிகள் வைத்தார்
அதுகண்ட அரசர் மீட்டும்
காணிக்கை சேர்க்க அவற்றைச்
சிவபெருமானுக்கு ஆகுக என
வும் மூன்றாம்முறையில் கொடுக்க
அவற்றைஅடியார்களுக்கு ஆகுக
என்றும் வைத்துத் தமது இணை
யற்ற துறவொழுக்கமும் வைராக்

கியச் சிறப்பும் புலப்பட விளங்கினார்.

இவரது ஞானாசிரியராகிய திருஞான சம்பந்த தேசிக சுவாமிகள் பேரில், இவரியற்றிய சிகாரத்தின மாலை என்ற நூலொன்று உள்ளது. சுவாமிகளுக்குக் கச்சியப்ப சிவாசாரியரிடத்துப் பெருமதிப்புண்டென்பதை, இக்கந்தபுராணச் சுருக்கத்தில், பல இடங்களில் அவரைப் பாராட்டியிருப்பது கொண்டு அறியலாம்.

சூரபன்மனது கொடுங்கோன்மையால் தேவர்கள் பல்லாற்றானும் துன்பமுற்றனர். சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணொருப்பிலிருந்து குமாரக் கடவுளைத் தோற்றுவித்தார். அவருக்கு உதவிபுரிய வீரவாகு முதலிய இலட்சத்து ஒன்பது வீரர்கள் அவரருளால் தோன்றினார்கள்.

சிவபெருமானது கட்டளைப்படி சூரபன்மனுதியோரை அழித்துத் தேவர்களைக் காப்பாற்றக் குமாரக்கடவுள் பூவுலகை வந்தடைந்து கிரவுஞ்ச மலையையும் தாரகனையும் அழித்தார். மகேந்திரபுரிப் போர்க்களத்தில் முதல் நாட்போர் தொடங்கியது. சூரபன்மனது மகனாகிய பானுகோபனும் குமாரக்கடவுளது தம்பியாகிய வீரவாகுதேவரும் போர் புரிந்தனர். அப்போரில் பானுகோபன் தோற்று ஓடினான்.

ஐந்தாம் நாளில் மீண்டும் வீரவாகுதேவரைப் பானுகோபன் எதிர்த்தான். விற்போர்முடிந்து வாட்போரில் பானுகோபன் வீரவாகுதேவரால் கொல்லப்பட்டான். வெற்றியுடன் மீண்ட வீரவாகுதேவர் குமாரக்கடவுளை அடைந்து வணங்க, அவர் அவரது திறலை மெச்சி வேண்டிய வரத்தைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளும்படி திருவாய் மலர்ந்தருளினார். அப்போது வீரவாகுதேவர், 'கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன், மேலையிந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன், மாலயன்பெறு பதத்தையும் பொருளென மதியேன், சால நின்பதத் தன்மையே வேண்டுவன் றமியேன்' என்று வேண்டியதாகக் கச்சியப்பர் கூறுகின்றார்.

கந்தபுராணத்தில், நிதிபதி, இந்திரன், மாலயன் ஆகியோரது பதவியில் விருப்பமில்லை என்று வீரவாகுதேவர் சொன்ன செய்தி, கந்தபுராணச் சுருக்கத்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

மேலே காட்டப்பட்ட செய்யுட்கள் அதற்குப் பிரமாணம். இது பௌத்த சமயத்திற்கண்ட அவரவதாரப் பிரபாவம். பிறந்த போதே மாதாவைக் கொன்ற அஹிம்ஸாமூர்த்தி அவர். 'விலாவில் வெடித்த குட்டியிது' என்று துஷ்டரைநோக்கிவழங்கி வரும் பழமொழி அப்புத்தரின் பிறப்பு முதற்றான் தோன்றியிருக்கவேண்டுமெனத் தெரிகிறது. தம் தருமபத்தினியும் மழலை மாறாத ஏகபுத்திரனும் பல்லாண்டுகள் தவிக்கும்படி நள்ளிரவில் அவரது அயர்ந்த நித்திரைவேளை பார்த்து அவரை விட்டுக் கரந்தோடிய கருணைமூர்த்தி அவர். அறியவேண்டுவனவற்றைக் குருபதேசமின்றியே அறிந்தாரெனக் கூறப்படும் ஞானமூர்த்தி அவர். அத்தகைய அவர் திரிபுரத்தசுரரிடஞ் சென்று முதன்முதலாகப் பௌத்தசமயத்தை யுபதேசித்து அவ்வசுரர்பாலிருந்து வந்த சைவசமய ஆசார அனுட்டானங்களைக் கெடுத்தார். அதனால் அவ்வசுரரெல்லாரும் பௌத்த[ரா]யினர். அதன் முடிவென்ன? சிவபிரானது நெற்றிக் கண்ணால் அவர் கூண்டோடு கொளுத்தப்பட்டுப் பிடிசாம்பராயினர். 'கள்ளவேடத்தைக் கொண்டு போய்ப் புரம்புக்கவாறுங் கலந்[த]சுரரை-யுள்ளம் பேதஞ் செய்[து]இட் டிருண்ட - வுபாயங்களும் -வெள்ளநீர்ச் சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்-உள்ள முள் குடை[ந்]தென்னுயிரை யுருக்கி யுண்ணுமே' என்ற நாலாயிரப் பிரபந்தத்திலும் அவ்வுண்மை காணப்படும். அச்சரித்திரத்தைச் சைவசமூகம் உணரவேண்டும். தம் சமயக்கடவுள் ஆக்கி[ன]தென்பதற்காகவே அவ்[வ]ராஜாஜி அம்மதத்தை யாதரிக்[கி]றார். அஃதறிவுடைமையாமா? 'கடவுள் இல்லை என்று புத்[தர்] ஒருபோதும் கூறியது கிடை[]யாது. அவர் கூறியதெல்லா[ம்] இதுதான்; நம்மைப் போன்[ற] சாதாரண மக்கள் கடவுள் இரு[க்]கிறாரா இல்லையா என்ற விவாத[த்]தில் நாம் வாழ்நாளை வீணா[க்க] வேண்டாமென்றே அவர் கூ[றினார்]

ஞர்' (11-6-56 தினமணி) என்கிருரவர். கடவுள் இல்லையென்று புத்தர் கூருததனுலேயே கடவுள் உண்டென அவர் கூறியவ ராய்விடுவாரா? கடவுள் உண்டென்பதே அவர்க்குக் கொள்கையானுல் அதை அவர் சாதாரணமக்களுக்கு உ'பதேசியாவிட்டாலும் அறிவாற்றல் மிக்க அசாதாரண மக்களுக்காவது உபதேசித்திருக்கலாம். அஃதுண்டா? அவ்வசாதாரண மக்களுள் ஒருவர் பெயரையாவது அவ்விராஜாஜியாற் சொல்ல முடியுமா? கடவுள் உண்டெனக் கூறப் புத்தருக்கு இஷ்டமில்லை, கடவுள் இல்லையெனக் கூறினுல் அவரை ஆத்திகர் வன்மையாக எதிர்ப்பர். அவ்விரண்டுங் கெட்டான்நிலையில் அப்புத்தர் மௌனஞ் சாதித்'தாரென அவ்விராஜாஜீ சொல்வாராயின் அவரிடம் சத்தியமுண்டென்னலாம். கடவுளுண்டென்பது புத்தருக்குக் கொள்கையானுல் அவரே விஸ்தாரமான வாதப்பிரதிவாதங்கள் செய்து அவ்வாத்திகத்தைச் சாதித்துப் போயிருப்பர். அப்படித்தான் ஆத்திக சமயத் தலைவரெல்லாஞ் சாதித்துப் போந்தனர், புத்தர் ஆத்திக விஷயத்திற் சாதித்தாரெனக் கருதப்படும் மௌனம் நியாயமென அவ்விராஜாஜீ சொல்லு முகத்தால் ஆத்திகசமயத் தலைவரையெல்லாம் பழிக்கிறவராஞர். புத்தமும் அவ்வாத்திக சமயத் தலைவன்மாரை அனுசரித்துச் சென்றிருந்தால் சாதாரண மக்களாகிய நாம் அவ்விவாதத்தி லிறங்கி வாழ் நாளை வீணுக்கி யிருப்போமா? மாட்டவே மாட்டோம். இப்போது அப்படிச்செய்து வருகிறோம்: அதற்குக் காரணம் அப் புத்தர் ஆத்திகவிஷயத்தில் அம் மௌனஞ் சாதித்துப் போனதேயாம். அப்பௌத்த நாத்திகமும் இப்போது ஹிந்துமதமாகி வரத் தொடங்கிவிட்டது- ஹிந்துமதத்தின் சீர்திருத்த நிலையாம் அது- அருமையான தீர்ப்பு! அடடா! நவீனருக்கு அந்த ஹிந்துமதமும் சொந்தமதம். வியவஸ்தையில்லாத அவரால் சைவம் வாழ்வ'து முண்டோ? இன்றென்று. ஹிந்து என்ற சொற்பொருள் தெரியாமல் அதைச் சுமந்து கொண்டலைகிரு ரவர், அவர் சம்ஸ்கிருத அர்ச்சனை புரியவில்லையேயென அழுகின்றனர். நிலத்தில் வசிக்கும் முதலைகள் போலும் அவர்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி ஆவணி-8

## பிள்ளையார் நோன்பு எப்பொழுது?

வேத சிவாகமங்களில் விதிக்கப் பெற்ற புண்ணியங்கள் இரண்டு வகைப்படும். ஒன்று பதிபுண்ணியம், மற்றொன்று பசுபுண்ணியம். இவ்விரண்டினுள்ளும் பதிபுண்ணியமாகிய சிவபுண்ணியமே அழியாத இன்பப்பேற்றைத் தருவதாகும்.

பலதிறத்தனவாக விளங்குகின்ற பதிபுண்ணியங்களுள், பொறிகளின் வழியே மனம் புகுதாமல் ஒருமைப்பட நின்று, இறைவனைத் தியானிப்பதற்கேற்ற நோன்புகளை நோற்றல் இன்றியமையாததென ஆன்றோர் விதித்தனர்.

நோன்புகள் சிவபெருமானைக் குறித்தனவும் அவரின் வேறல்லாத தேவியார், மூத்தபிள்ளையார், முருகவேளாதியோரைக் குறித்தனவுமாகப் பல உள்ளன அவை ஆண்டு -திங்கள்-நட்சத்திரம், திதி - கிழமை பற்றியநோன்புகளாக இருக்கும்.

பிள்ளையாரைக் குறித்த நோன்புகளுள் வெள்ளிக்கிழமை, சதுர்த்தி திதி, சஷ்டிதிதி நோன்புகள் சிறந்தன. ஒவ்வோராண்டிலும் திருக்கார்த்திகை நாளில் தொடங்கி இருபத்தோராவது நாள் சஷ்டியும் சதயமும் கூடுகிற அன்று நிறைவு செய்கிற பிள்ளையார்நோன்பு விர

தம் விநாயக விரதங்களுள் மிகச் சிறந்ததாகும்.

இவ்விரதத்தைப்பற்றிக் காரணாகமம் ஆருத்திரா விதிப் படலத்திலும், விநாயகபுராணம், கந்தபுராணம், உபதேசகாண்டமாதியவற்றிலும் விரிவாகக் கூறப் பெற்றுள்ளது. கார்த்திகை மாதத்து அபர பக்கத்துப் பிரதமை முதல் மார்கழி மாதத்துப் பூர்வபக்கத்துச் சஷ்டியும் சதயமும் கூடிய நாள்வரை இருபத்தொருநாட்கள் இவ்விரதத்தை அநுட்டிக்கவேண்டுமென்று நூல்களில் விதிக்கப் பெற்றிருக்கிறது.

திருமால், சத்தமாதர்கள், மற்றைத் தேவர் முனிவர்களாதியோர் தமது குறைகள் தீரும்பொருட்டு இவ்விரதத்தை அநுட்டித்தார்களென்று புராண இதிகாசங்கள் கூறுகின்றன. மரகத விநாயகரைத் தமது குலதெய்வமாகக் கொண்டு காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்திருந்த நமது நாட்டுக்கோட்டை நகர வணிகப் பெருமக்களுக்குத் தோன்றுதொட்டு அநுட்டானத்திலிருந்து வருகின்ற சீரிய நோன்பு, பிள்ளையார் நோன்பேயாகும்.

இவ்வாண்டுப் பிள்ளையார் நோன்புநாளை, இட்டமொழிச் சிவசூரியநாராயண பிள்ளையவர்களின் கலைமகள் வாக்கிய பஞ்சாங்கம், யாழ்ப்பாணம் இரகுநாதையரவர்களின் பஞ்சாங்கம் போன்ற ஒன்றிரண்டு பஞ்சாங்கங்கள்தவிர மற்றைப் பஞ்சாங்கங்களெல்லாம் பிழையாகவே குறித்திருக்கின்றன.

நம்மவர்கள் அனைவரும் அன்போடும் சிரத்தையோடும் அநுட்டித்து வருகிற இந்நோன்பு நாளை உண்மையறியாது திருக்கார்த்திகைக்குப் பின்பு ஐம்பதாவது நாளாகிய மார்கழி23 (6-1-57)ல் பெரும்பாலான பஞ்சாங்கங்கள் குறித்திருப்பது பெரிதும்பிழைபாடுடையதாகும். திருக்கார்த்திகைக்குப் பின்பு இருபத்தொராவது நாளாகிய கார்த்திகை 23 (8-12-56)ல்தான் இந்நோன்பு நோற்றல் வேண்டுமென்பதை முன்னெச்சரிக்கையாகநம்மவர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறோம்.

# லோகமான்ய திலகர்

[தியடோர் எல். ஷாய்]

திலகரும் அவருடன் உழைத்த தேசீய வாதிகளும் படிப்பு முறையில் சொல்வது போன்ற அரசியல் தத்துவ அறிஞர்கள் அல்ல; எனினும் அவர்கள் தங்கள் அரசியல் போராட்டங்களில் கண்ட உண்மைகளை வைத்து, தாங்கள் நடத்திய இயக்கத்துக்கு வழிகாட்டியாக ஒரு சிந்தனைக் கோவையை உருவாக்கினார்கள்; அதனை இந்திய அரசியல் தத்துவம் என்றே சொல்லவேண்டும், அவ்வளவுக்குப் போதிய சிறப்புடையது அது. சுயராஜ்யம் அவசியம்; ஐரோப்பிய முன் மாதிரியைப் பின்பற்றி தேசீயம் விரும்பத் தக்கது என்பதனால் அல்ல; இந்தியாவின் வாழ்க்கைத் தத்துவம் முழுவதினாலும் ஒரு தார்மீகக் கடமையாக எழுகின்றது சுயராஜ்யம். இந்த உறுதியை அடிப்படையாக வைத்து, சுதந்திர இந்தியாவுக்குத் திலகரும்தேசீய வாதிகளும் ஒரு இந்திய அரசியல் தத்துவத்தின் பொதுப்படையான வரையறைகளை உருவாக்கினார்கள்.

அரசாங்கத்தின் நோக்கம் என்ன? அதன் அதிகாரம் எங்கிருந்து வருகிறது? அதற்கு நியாயம் என்ன? தனிப்பட்டாருக்கும் அரசாங்கத்துக்கும் உள்ள உறவுஎன்ன? சமூகத்துக்கும் அரசாங்கத்துக்கும் உள்ள உறவு என்ன? இவற்றைப் பற்றிய கருத்தே எந்த அரசியல் தத்துவத்துக்கும் முதல் அக்கறை எனலாம். இந்தக் கேள்விகளெல்லாம் இந்தியாவின் சிறப்பான அரசியல் எழுத்துக்களில் விளக்கமாகத் தீர்க்கப்பட்டன. இறுதியாக பிரபஞ்சத்தின் தார்மீக அல்லது ஆத்மீக நோக்கமாக உள்ள நீதியையும் சுதந்திரத்தையும், 'தர்மத்தையும் பேணி வளர்ப்பதற்கே' அரசாங்கம் இருக்கிறது. அதன் அதிகாரம் அல்லது ஆற்றலுக்குப் பிறப்பிடம் இருவகைப்படும். அது தன் வேலையைச் செய்ய வேண்டும் என்ற தார்மீக அவசியம் ஒன்று; இந்த வேலை எவ்வழியில் நடக்க வேண்டும் என்பதற்கு மக்கள் தரவேண்டிய சம்மதம் மற்றொன்று. தனிப்பட்டவர், குடும்

பம், கூட்டம், அல்லது கிராமம் சமூகம் என்று அரசியல் சமுதாயத்தின் அடிப்படை உறுப்புகளாகக் கருதப்பட்டவை ஒரே காலத்தில் உடன் வாழ்ந்தும் ஒன்றை ஒன்று சார்ந்தும் இருப்பதால் அரசாங்கத்தின் ஆற்றல் கட்டுப்படுத்தப்படுகிறது. தர்ம ஆட்சி அல்லது தர்ம ராஜ்யத்தினாலும் அது மேலும் கட்டுப்படுத்தப் படுகிறது; அதனை இறுதியாகநியாயமாக்குவது தர்மராஜ்யமே. அரசியல் சமுதாயம் அனைத்தையும் ஒரு கூட்டுறவுப் பொது அரசாக இணைத்து நடத்துவதும் தர்ம ராஜ்யமே; அரசாங்கத்தினால் எதிர்க்கவோ குறுக்கவோ முடியாதது தர்ம நியதியே. வேறு வகையாகச் சொன்னால், மக்கள் வாழ்க்கையின் தார்மீக நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு அவர்களுக்கு உதவவும், அவ்வாறு அவர்கள் நிறைவேற்றுவதற்கு வேண்டிய உறுதியான நிலைமை, அமைதி, முன்னேற்றம் ஆகியவற்றை ஏற்படுத்தவும் உள்ள ஸ்தாபனமாக இருப்பதே அரசாங்கம்.

சுருங்கச் சொன்னால் இதுதான் திலகரும் அவருடன் உழைத்த தேசியவாதிகளும் இருபதாம் நூற்றாண்டில் கைக்கொள்ள முயன்ற அரசியல் தத்துவத்தின் அடிப்படையாகும். திலகர் சொன்னதுபோல் 'தர்மத்துக்காகவும் தர்மத்தினாலும் பணியாற்றுவதினால்தான்' சுயராஜ்யம் ஒரு தார்மீக அவசியமாகும். இந்தத் தத்துவத்தின்படி தார்மீக அவசியமாகும் வேலைகளை சுய ஆட்சியுள்ள அரசியல் சமுதாயமே செய்ய முடியும். எந்த அந்நிய நாடும் எந்த அந்நிய அரசியல் தத்துவமும் எவ்வளவு நலம் பயப்பதாயினும் அதனால் இந்தியாவின் தர்மத்தைப் பேணி வளர்க்க முடியவே முடியாது.

இதனால் பிற பண்பாடுகளிலிருந்து இந்தியா ஒன்றும் படிக்கக் கூடாது என்பதல்ல. ஆனால் அதன்படி திலகர் மேற்கத்திய 'லிபரல்' அரசியல் தத்துவத்தையும் மார்க்ஸிய-கம்யூனிஸ்ட் அரசியல் தத்துவத்தையும் இந்தியாவுக்கும் ஏற்றதல்ல என்றுதள்ளிவிட வேண்டியவரானார். கடைசியில் பார்க்கப்போனால் இந்திய அரசியல் தத்துவத்துக்கும் மேற்கத்திய 'லிபரல்' அரசியல் தத்துவத்துக்கும் ஒற்றுமைகள் இருக்கலாம்.

. (தொடரும்)

(5ம் பக்கத் தொடர்ச்சி)

தில் 'அண்டர், அயன் விண்டு வின் வாழ்வை விரும்பவில்லை என்று அவர் சொன்னதாகக் குறிக்கப்பெற்றுள்ளது. இங்கே சொற்சுருக்கம் காணப்பெறுகிறதேயன்றிப் பொருட்சுருக்கம் சிறிதும் இல்லையென்பது உணரத்தக்கதாகும். அண்டர் என்ற சொல்லில் நிதிபதியும் இந்திரனும் அடங்குவர்.

'நின்பதத் தன்மையே வேண்டுவன்' என்ற முதல்நூற் பகுதியைவிட 'தண்டைகளணிந்த நின் சரணத் தன்மையே கொண்டிட வேண்டுவன்' என்ற வழிநூற்பகுதி பொருட்சிறப்புடையதாயிருந்து, முன்னே முளைத்த காதைவிடப் பின்னே முளைத்த கொம்பு வலிமையாயிருக்குமென்பதை மெய்ப்பித்துக் கொண்டிருக்கிறது.

முதல் நூல் வழி நூலாகிய இரண்டிலும் அன்பு தேற்றேகாரத்தால் வலியுறுத்தப் பெறுவதும் நினைவிலிருக்க வேண்டியதல்லவா!




திருவூடல்:- ஆதி தம்பதிகளாகிய பார்வதீ பரமேஸ்வரர்களின் ஊடல் வர்ணனையாகிய இந்நூல் சுப்பிரமணிய சாஸ்திரிகளால் வடமொழியில் இயற்றப் பெற்றது. கண்டனூர் சிவஸ்ரீ இராமநாதக்குருக்கள் அவர்கள் இயற்றிய தமிழுரையோடு, யாழ்ப்பாணம் அச்சுவேலி சிவஸ்ரீ சகுமாரசாமிக் குருக்கள் அவர்களால் பரிசோதிக்கப்பட்டு வெளியிடப்பெற்றுள்ளது. விலை அணா நான்கு. உரையாசிரியரிடமும் பரிசோதனையாளரிடமும்கிடைக்கும்.

## கந்தர் சஷ்டி விழாக் கழகம்

தேவகோட்டை ஆக. 16-
3-8-56ல் கூடிய மகாசபைக் கூட்டத்தில் பதினோராவது ஆண்டுக்கு திரு, சி மு அரு வீர அண்ணாமலை செட்டியார் தலைவராகவும், கு சுரு வெ

இ ரா ம நா த ன் செட்டியாரும், மு சோம மு முத்துக்கருப்பன் செட்டியாரும் செயலாளர்களாக வும், ஆவி க மெ இராமநாதன் செட்டியார் பொருளாளராகவும் மற்றும் 17 பேர்கள் நிர்வாக சபை அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக் கிறார்கள்.

## சுந்தரமூர்த்தி குருபூசை

நாகர்கோவில் நன்னெறி மன் றத்தின் சார்பில் சுந்தர மூர்த்தி சுவாமிகளின் குருபூசை விழா 32வது பிரார்த்தனைக் கூட்டம் சுசீந்திரம் தருமையாதீன மடத் தில் 12-8-56 மாலை நடைபெற் றது. திருவாவடுதுறை ஆதீனம் சுசிந்தை மடபதி திருஞான சம் பந்தத் தம்பிரான் தலைமை தாங் கினர். திருமுறைஓதுதல், தியா னம், பசனை, நன்மொழி கேட் டல், மௌனம் ஆகிய பதிவு நிகழ்ச்சிகள் வழக்கம்போல் நடந் தேறின. பெரிய புராணத்தை ஆதாரமாகக் கொண்டு நாயனர் வாழ்க்கையைப் பற்றித் தம்பி ரான் சுவாமிகள் விளக்கமாக நல்லுரை பகர்ந்தார்கள். தசாவ தானம் திரு ஆறுமுகம்பிள்ளை அவர்கள் 'ஐந்துபேர் அறிவும்' எனத்தொடங்கும் செய்யுளுக்கு நல்முறைப்பொருள் விரித்துச் சொற்பெருக்காற்றினர். தேவார பாடசாலை ஆசிரியர் திரு சிவ சுப்பிரமணியபிள்ளை அவர்களு டையவும் மாணவிகளுடையவும் இன்னிசைப் பசனை திருக்கூட் டத்தை மிகவும் இன்புறச் செய் தது.

## ஸ்ரீ சுந்தரர் விழா

இலக்குமிபுரம் சொக்கலிங்க வித்தியா சாலையில் 13-8-56 மாலை ஸ்ரீ சுந்தரர் விழா கொண் டாடப் பெற்றது. தலைமை ஆசி ரியர் ஜி.சுவாமிநாதய்யர் தலைமை தாங்கினர். இறைவணக்கத்திற் குப் பின் சுந்தரர் வாழ்க்கை வர லாறு விளக்கிக் கூறப்பட்டது. சொ.வி. மாணவ, மாணவிகளால் சுந்தரர் தேவாரம் பண்ணுடன் ஓதப்பெற்றது. கும்மி கோலாட் டங்கள் நடைபெற்றன. தலைவர் முடிவுரைக்குப் பின் நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

## தங்கம், வெள்ளி

| மதுரை | ஆக-20 | |
|---|---|---|
| பாட்லா | 105 | 00 |
| சவரன் | 68 | 8 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | 0 0 |
| வெள்ளி 100தோலா | 176 | 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 0 |

## நமது வாழ்த்து

நம்நகர் வைத்தியமணி சித. வே. சண்முகநாதபிள்ளை சகோதரி செல்வி சரசுவதிக்கும் காரைக்குடி திரு, மெ. இராமச்சந்திரப்பிள்ளை குமாரன் செல்வன்சேதுராமனுக்கும்19-8-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

திருச்செங்கோடு சிவ ஸ்ரீ எ சதாசிவபண்டித சிவாசாரியார் செல்வன் உமாபதிக்கும் சிவாயமலை சிவஸ்ரீ ரெத்தினமாணிக்சக் குருக்கள் செல்வி கௌரிக்கும் 19-8–56ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

மணமக்கள் சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வு வாழ ஆண்டவனை வேண்டுகிறோம்.

### சுதந்திர தின விழா

இலக்குமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலையில் சுதந்திர தின விழா 15-8-56காலையில் கொண்டாடப்பெற்றது. வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர் திரு ஜி சுவாமிநாதய்பர் தேசீய மூவர்ணக்கொடி ஏற்றுவித்தார். இந்தியசுதந்திரம் நீடுவாழ ஸ்ரீமீனாட்சிகோயிலில் விசேஷப் பிரார்த்தனை நடைபெற்றது கூட்டத்தில் சுதந்திரம் பெற்றபின் நாம் சாதித்தவைகள் இன்னும் சாதிக்கவேண்டியவைகள் பற்றி ஆசிரியர்கள் பேசினார்கள். சுதந்திரம் நீடிக்க ஒவ்வொருவரும் உழைக்கவேண்டும் என்று பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு மாணவ மாணவிகளுக்குத் தின்பண்டங்கள் நல்கி நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

### கந்தர்சஷ்டி விழாக் கழகம்

தேவகோட்டை ஆக 18

3-8-56ல் கூடிய மகாசபைக் கூட்டத்தில் பதினோராவது ஆண்டுக்கு திரு சி மு அரு வீர அண்ணாமலைசெட்டியார் தலைவராகவும், கு கரு வெ இராமநாதன்செட்டியாரும் மு சோம மு முத்துக்கருப்பன் செட்டியாரும் செயலாளர்களாகவும் ஆ வி க மெ இராமநாதன் செட்டியார்பொருளாளராகவும் மற்றும் 17பேர்கள் நிர்வாகசபை அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்கள்,

---

# 'மதுரை மாநகர்'

புதுடில்லி ஆக 9-

இந்தியசர்க்கார் பிலிம்ஸ் டிவிஷன் வரலாற்றுச் சித்திரமான 'மதுரை மாநகர்' தென்னிந்தியாவின் மிகப் புராதன தெய்வ நகராகிய மதுரையின் கீர்த்தியையும், சரித்திர வரலாற்றையும், புராதன வரலாறுகளையும் வெகு சிறப்பாய் எடுத்துக்காட்டுகிறது. ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரர் கோயில்கள், கோபுரங்கள், பொற்றாமரைக்குளம், திருமலைநாயக்கர்மஹால், புதுமண்டபம், ஆயிரக்கால் மண்டபம் முதலிய கலையழகுச் சின்னங்கள் எல்லாம் இப்படக்காட்சியில் இடம் பெற்றுள்ளன.

தெய்வதம்பதிகளானமீனாட்சி சுந்தரேசுவரர் திருக் கல்யாண விழா தென்னாட்டில் மிகப் பிரசித்தி பெற்ற திருவிழாவாகும். ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டுவந்து வருஷந்தோறும் அந்தக் கல்யாண மகோத்சவத்தைத் தரிசித்துச் செல்கிறார்கள். இப்போது வெளியிடப் படுகிற திரைப்படம் இந்தக் காட்சியுடன் ஆரம்பமாகிறது.

16-18வது நூற்றாண்டுகளில் மதுரையை ஆண்ட நாயக்கமன்னர்கள் அன்போடும் பக்தியோடும் கலை ஆர்வத்தோடு கட்டிய கோபுரங்கள், திருமலைநாயகரின் மஹால் முதலியவை சரித்திர முக்கியத்வ சின்னங்களாக விளங்குகின்றன. புது மண்டபத்தில் நாயக்கமன்னர்கள், ராணிகள் ஆகியோரின் சிலைகள் அமைந்த தூண்கள்விளங்குகின்றன.

ஸ்ரீ மீனாட்சி கோவிலின் பல்வேறு மண்டபங்களும் பிரகாரங்களும் இத்திரைப் படத்தில் காட்சியளிக்கின்றன. திருவிளையாடற் புராணத்தில் கண்டுள்ள சிவ லீலைகள் செதுக்கப்பட்டுள்ள சிலைகளையும் அதில் காணலாம். ஊர்த்துவ தாண்டவம், அர்த்தநாரீஸ்வரர், ரதிமதன், மோஹினி அவதார விஷ்ணு, கல்யாணைமுதலிய எழில் உருவச் சின்னங்களையும் இப் படத்தில் பார்க்கலாம். தென்னிந்தியாவின் பல நூற்றாண்டுச் சரித்திரமும் தெய்வீக வழிபாடும், கலைகளின்சிறப்பும் மதுரையின் புகழும் இப்படத்தில் ஒருங்கே காட்சியளிக்கின்றன.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-46
துன்முகி-ஆவணி-15
30-8-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## குறிஞ்சி

தலைவன் சிறைப்புறத்தே வந்திருப்பதை யறிந்த தோழி இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது.

அருளிலர் வாழி தோழி மின்னுவசி,பிருடுங்கு விசும்பி னதிரு மேறேடு,
வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வான, நெடும்பெருங் குன்றத்துக் குறும்-
பல மறுகித், தாவில் பெரும்பெய றலைஇய யாமத்துக், களிறகப் படுத்த
பெருஞ்சின மாசுணம், வெளிறில் காழ்மரம் பிணித்துநனி மிளிர்க்குஞ்,
சாந்தம் போகிய தேங்கமழ் விடர்முகை, யெருவை நறும்பூ நீடிய,
பெருவரைச் சிறுநெறி வருத லானே-261 :-சேந்தன் பூதனார்

தோழீ! நீ நெடிது வாழ்வாயாக. மின்னல் பிளந்தெழுந்து இருள் தூங்குகின்ற ஆகாயத்தில் முழங்குகின்றஇடியோசையோடு வெப்பமாகிய கதிரவனை மறைத்த நிறைந்த சூலையுடைய மேகம் நெடிய பெரிய மலையினிடத்துச் சிறிய பலவாக இயங்கி வருத்த மில்லாத பெரிய மழையைப் பெய்துவிட்ட நடுயாமத்தில் களிற்றி யானையைச் சுற்றிக்கொண்ட பெருஞ்சினத்தையுடைய பாம்பு வெண்மையில்லாது முற்றிய வயிரம் பாய்ந்த மரத்துடன்பிணித்து நன்றாகப் புரட்டுகின்ற சந்தனமரத்திலிருந்து வந்த நறுமணங் கமழுகின்ற மலைப்பிளப்பையுடைய துறுகல்லின் அயலிலே,கொறுக் கத்தியின் நல்ல பூக்கள் மலர்ந்த பெரியமலையிலேயுள்ள சிறிய நெறியில் வருதலால் தலைவர் நம்பாற் சிறிதும் அருளுடையவால் லர்.

:-பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

நெறிமருப் பெருமை நீலவிரும் போத்து
வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வேதிரின் கொடிப்பிணை யலளே

:-ஐங்குறுநூறு 91

உரை:-'நெறி மருப்பு — நெறியாக இடையிடையே வெட்டப்பட்டது போன்ற அறல் பட்ட தட்டைக் கொம்புகளையுடைய, நீல-கருநிறம் பொருந்திய, இரும்-பெரிய, எருமைப் போத்து-எருமைக் கடாவானது, வெறி மலர்-மணங் கமழுகின்ற பூக்களையுடைய, பொய்கை-குளங்களிலேயுள்ள, ஆம்பல் - ஆம்பல் மலர்களை, மயக்கும்-மேய்ந்து கெடுக்கின்ற, கழனி ஊரன்—வயல்கள் சூழ்ந்த ஊரனுக்கு, மகள் இவள்-மகளாகிய இவள், பழன வெதிரின்-வயலில் உண்டாகின்ற மூங்கிலாகிய கரும்பினது, கொடி-கொடிபோன்ற பூவினாற் றொடுக்கப்பட்ட, பிணையலள்-மாலையையுடையவள்' என்பதாகும்.

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகை நூல்களுள்மூன்றுவதாக விளங்குவது ஐங்குறுநூறு இது, சிவபெருமான் துதியாக அமைந்துள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுளொன்றுள்பட ஐந்நூற்றொருசெய்யுட்களைக்கொண்டுள்ளது.

மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை யென்னும் ஐந்து திணைகளுக்குமுரிய ஒழுக்கங்களைத் தனித்தனியே நூறு நூறு பாடல்களில் இந்நூல் விளக்குகின்றது. ஆசிரியப்பாவாய் அமைந்த நூற்செய்யுட்கள் ஆறு அடிக்கு மேற்படாதனவாய் இருப்பதால் நூலுக்கு ஐங்குறு நூறு என்னும் பெயர் அமைந்தது.

மருதம் முதல் முல்லைவரையுள்ள ஒவ்வொரு திணைக்கும் ஆசிரியராவார் ஓரம்போகியார். அம்மூவனார், கபிலர்.ஓதலாந்தையார், பேயனார் என்போரெனவும் கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் எனவும் அறிகிறோம்.

இந்நூலைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழாரும் தொகுப்பித்தவர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையுமாவர். முதல் நூறாகிய மருதத்தைப் பாடிய ஓரம்போகியார். கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். மருதத் திணையில் நல்ல பயிற்சியும், அத்திணைவளங்களை விளங்கப் பாடுவதில் நல்ல வன்மையும் இவருக்கு உண்டு. தமிழ்நாட்டு முடியுடை மன்னர் மூவராலும் இவர் மதிக்கப்பெற்றிருக்கின்றார்.

ஐங்குறுநூற்று மருதப் பகுதி பத்துப் பிரிவுகளை யுடையது. அவை வேட்கைப் பத்து முதல் எருமைப் பத்துவரை பப்பத்துப் பாடல்களை யுடையனவாய் இருக்கின்றன. ஊடலொழுக்கத்தை உணர்த்துவதுமருத திணையாதலால்அதுபற்றியசெய்திகளே இங்கு அறியப்பெறுவனவாயுள்ளன

பரத்தையோடு கூடியொழுகிய தலைவன், மீண்டு தலைவியை அடைந்து ஒழுகும்பொழுது தோழியோடு சொல்லாடி, அவனது புறத்தொழுக்க நாளில் அவர்கள் என்ன நினைத்தார்களென்று கேட்க, அவள் அவனது நல்வாழ்வையேகருதியிருந்தோமென்று சொல்லியது முதலியன வேட்கைப்பத்தில் கூறப் பெற்றுள்ளது.

தலைவன் எவ்வாறு தப்பியொழுகினும் அவன் கொடுமை நின்னாற் புலப்படுதல் தகாது என்று பாங்கிக்குத் தலைவிசொல்லியது முதலியன வேழப்பத்திலும், புறத்தொழுக்கம் எனக்கு இனியில்லை என்று தலைவன் தெளிப்ப, அஃது உளதென்று வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது முதலியன கள்வன் பத்திலும், புறத்தொழுக்கம் விரும்பேனென்று ஆயத்தாரோடு சூளுற்றதலைவன், பின்பும் பரத்தையரோடுபுனலாடத் தொடங்குகின்றானென்பது கேட்ட தலைவி அவனுழையர் கேட்பத் தோழிக்குச் சொல்லியது முதலியனதோழிக்குரைத்த பத்திலும் உரைக்கப் பெற்றுள்ளன.

புறத்தொழுக்கத்திலிருந்து மீண்டு வாயில் புக்க தலைவனை

யும் பாணன் முதலாகிய பக்கத்தாரையும் தலைவி இகழ்ந்து கூறியதுமுதலியன புலவிப்பத்திலும் வாயில் பெற்றுப் புகுந்த தலைவன் மீண்டும் புறத்தொழுக்க மொழுகிப் பின்பும் வாயில்வேண்டத் தோழி மறுத்துக் கூறியது முதலியன தோழி கூற்றுப் பத்திலும், முன்னர்க் கூடிய பரத்தையைவிட்டுச் சின்னுளில் பிறிதொரு பரத்தையைத் தலைவன் கூடினனென்பதறிந்த தலைவி, அவன் மனைவயிற் புகுந்தவிடத்துப் புலந்து கூறியது முதலியன கிழத்திகூற்றுப் பத்திலும் சொல்லப்பெற்றுள்ளன.

தலைவன் பரத்தையரோடு புனலாடினனெனக் கேட்டுத் தலைவி புலந்து, தலைவன் அதனையில்லையென்று மறைத்தபொழுது சொல்லியது முதலியன புனலாட்டுப் பத்திலும், தலைவி தன்னைக் கொடுமை கூறினளென்பது கேட்ட பரத்தை தலைவன் தன்மேல் அன்புடைமையை அவட்குப் பாங்காயினர் கேட்பச்சொல்லியது முதலியன புலவிவிராய பத்திலும், குறைவேண்டி நின்ற தலைவனுக்குத் தோழி. இவள் இளையள் விளைவிலள் என்று சேட்படுத்தியது முதலியன எருமைப் பத்திலும்பேசப்பெற்றுள்ளன.

சேட்படை என்பது, தலைவியை அடைதல் எளிதென்று நினைத்த தலைவனுக்கு, அஃது அத்துணை எளிதன்று என்று சொல்லி, அகலும்படி தோழி உணர்த்துவதாகும். தலைவியை நெருங்க வந்த தலைவனைத் தோழி சேட்படுத்துதலால் ஊடலையொத்த இது மருதத் திணையில் இடம்பெற்றது.

தோழியைக் குறையிரக்குந் தலைவன் கையுறைத் தழை கொண்டுவந்து அவளிடம் கொடுத்து அதனைத் தலைவிக்குத் தந்து அவனை எப்படியாயினும் கூட்டிவைக்கும்படி தோழியை வேண்டுவான். தலைவியை அவனோடு கூட்டிவைப்ப தன் அருமை, தலைவியின் பெருமை, ஆதியவற்றை அவனுக்கு உணர்த்தித் தோழி பற்பல ஏதுக்கள் காட்டி மறுத்துக் கூறி அவன் நினைவைச் சேட்படுத்துவாள். சேட்படுத்துதலுக்கு அகற்றுதல் என்பது பொருள்.

ஒரு பொருளைப் பெறுவதற்கு முன்பு, அதனைப் பெறுதலில் உள்ள அருமை புலப்படுமானல், அதனைப் பெறுபவர்க்கு முன்னினும் பேரின்பம் பெருகும். அதனைப் பெறுவித்தாரிடத்து இத்

துணை அரிய பொருளைப் பெறுவித்தனரே யென்று அன்பு வளரும்- பெற்ற அப்பொருளினிடத்தும் அழுத்தமான பற்று உண்டாகி நிலைத்து நிற்கும். இவ்வாறு அகற்றி அணுகுவித்தலால் உண்டாகும் பேரின்பத்தை உளங்கொண்டுணர்ந்ததனாலேயே வள்ளுவர் பெருமான் அகற்றி அணுகுவிக்கும் மகளிர் திறமான ஊடலுக்கு 'ஊடலுவகை' என்னும் தலைப்புப் பெயரிட்டு ஓரதிகாரம் உரைப்பாராயினர்-

'சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்' என்ற இறையனாரகப்பொருட் சூத்திரத்திற்கு உரையெழுதிய ஆசிரியர் நக்கீரனார் 'காப்பு மிகுதி சொல்லி அகற்றித் தழீஇக்கோடலும்' என்று விளக்குகின்றார். இங்கே அகற்றுவது தழீஇக்கோடலை முடிபாகக் கொண்டென்று அறியப்படுவதால் 'ஊடுதல் காமத்திற்கின்பம் அதற்கின்பம், கூடி முயங்கப் பெறின்' என்ற திருக்குறளை உடனிறுத்திக் காண்பார்க்குச் சேட்படுத்துதல் ஊடல் போன்றதென்பது நன்கு புலனாகும். 'தலைமகனை ஆற்றாமை செய்வன போன்று ஆற்றுவிப்பன சொல்லு'மென்று இச்சூத்திரத்திரத்திற்குக் கருத்துரைத்தார் நக்கீரனார். இதனால் சேட்படுத்துந் தோழி தலைவனை அகற்ற நினைப்பாளல்லள். அணுகிவரைந்து கொள்ளும்படி செய்வதற்கே முயலுவாள்' என்பது அறியக்கிடக்கின்றது.

இங்கே தலைவனைச் சேட்படுத்துகின்ற தோழி, அவன் விருப்பங் கொள்ளத்தக்க நிலையில் 'தலைவி பருவம் வந்தவளாயில்லை' என்பதை மிகச்சாதுரியமாகக் கூறுகின்றாள். தலைவி சூடியிருக்கின்ற மாலையே அவளது பேதைப் பருவத்தைப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறதாம். பண்டை நாட்களில் மணமில்லாத மலர்களை மங்கையர்கள் சூடிக்கொள்ளும் வழக்கமில்லை. பூவுக்கு வண்ணம் எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாதது மணமும் என்று அந்நாளில் அவர்கள் கருதினார்கள்.

கரும்பின்பூ மணமில்லாதது மட்டுமல்ல; அழகுமில்லாதது. அதைத் தலைவி சூடியிருக்கின்றாளென்றபிறகு, அவளதுபேதைப் பருவ உண்மையை உணர்த்த வேறுசொல்லவும் வேண்டுமோ? இனிக் கரும்பைக் கரும்பென்று சொல்லாது சிறுபிள்ளைகள்சொல்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

"காதல்தான் தமிழருடைய உயிர். பரிபாடலைப் பார்த்தால் தெரியும். பெண்ணை வெறுத்தல் வடநாட்டு அறம். மனத்துக்கண் மாசிலனுதல் தமிழ்நாட்டு அறம். அறம் பொருள் இன்பம் இம் மூன்றுதான் உண்டு தமிழனுக்கு. இன்னென்று "வீடு" -தமிழனுக்குக் கிடையாது. ...இன்று வாழ்க்கை-இதுதான் அறம் தமிழன் கருத்துப்படி. இது என் கொள்கை - என் நண்பர் இராமசாமியார்கொள்கை...' (20-9-47-போர்வாள்) என்கிறுர் நவீனர். தமிழன் கருத்துப்படி என்றுரே அவர். அத் தமிழன் மூடனு? அறிஞனு? மூடத் தமிழனுக்குத்தான் அக் கருத்திருக்கமுடியும். திருவள்ளுவர் அறிவுடைத்தமிழர். 'பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா -ரிறைவனடி சேராதார்', 'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க-லுற்ருர்க் குடம்பு மிகை', 'யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்- குயர்ந்த வுலகம் புகும்', 'ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலை யாப்-பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' என்றெல்லாம் முழங்கி அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றுள் வீடொன்றையே தமிழருள்பட எல்லாவுயிர்களும் அடைய முயல வேண்டுமென வற்புறுத்தியது அப்பெருமகனுரது திருக்குறள். அவ்வறிவுடைத் தமிழரின் வழிநிற்கும் நற்றமிழாது சகவாசத்தை அந்நவீனர் விரும்பாதவர். ஒரு சத்திரத்தில் பார்ப்பனர் சோறுண்டு தெருவிற் கொண்டுவந்து எறியப்பட்டன எச்சிலிலைகள். அவற்றை ஒன்றும் விடாமல் நக்கியுண்டு மனிதவர்க்கத்துக்கே மானக்கேட்டையுண்டாக்கியவர் ஈ-வெ-ராமசாமி. அவரை நண்பாராகக் கொண்டு அவர் படத்தைத்திறந்துவைத்த அந்நவீனரின் புத்தி மாத்திரம் நல்லதா யிருக்குமோ? 'மாந்தர்க்

கினத்தியல்ப தாகு மறிவு' என்றது குறள். அங்கவீனர் சைவ மேடைகளில் ஏறி அண்டகடாகமும் அதிரும்படி சைவப் பிரசாரங்களுஞ் செய்வர். ஏன்? சைவ சமூகத்தை ஏமாற்றிப் பிழைக்கவே யாம்.

சைவஞ் செத்துக்கொண்டிருக்கிறதென அவர் துயருற்றுக் கூறினரே. அச்சாவு அவர்கண்ணிற்படுவது நிசமாயின் அச்சமயத்தைச் சாகடித்து வருபவர் அவரேதான். எனக்குப் புலப்படுவது அது. அதை இதுவரை ஓரளவு எடுத்துக் காட்டினேன் நான். அவர் காட்டுந் துயரத்தில் அவர் நெஞ்சு கலக்கவில்லையென்பதை அந்த அளவு கொண்டே சைவ சமூகந் தெரிந்து கொள்ளலாம்.

இனித் தமிழும் முக்கியமல்ல என்றுரவர். அதுவும் நுனிநாப் பேச்சே. என்னை? சம்ஸ்கிருதம், தமிழ் உள்பட எல்லா மொழிகளும் மாயாகாரியம், சடம். இக்கொள்கை அவருக்கில்லை. அதனால் 'சிவபெருமான் செய்த தொழில் அத்தனையையும் தமிழ்மொழியும் செய்திருக்கிறது' (28-2-54 தினமணி) என்கிறுரவர். சிவபெருமான் செய்யுந் தொழில்களெல்லாம் ஐந்தாயடங்கும். அப்பஞ்சகிருத்தியத்தைத் தமிழுஞ்செய்ததென்றால் அதைப்போன்ற சிவாபசாரம் வேறுமுண்டோ? அக்கிருத்தியத்துக்குச் சிவனெனுங் கடவுளுந் தமிழெனுங் கடவுளுமாக இரண்டுகடவுள ரிருப்பது மிகையென்னுங்குற்றம். மேலும் சடகாரியமாகிய மொழியைக் கடவுளென்றல் நாத்திகமே. தமிழைக் கடவுளென ஓரிடத்திலும், தமிழ்முக்கியமல்லவென மற்றோரிடத்திலும் பேசுவது வெறும் பிதற்ற லென்க. நவீனர் இப்பிதற்றல்களும், சமயக் கலவை, சாத்திரக் கலவை, ஆசாரியக்கலவை, கொள்கைக் கலவை முதலிய விபசாரப் பேச்சுக்களும் ஆகிய மருந்தைச் சைவமக்களுள் ஏழையராயுள்ளவருக்கு ஏற்றித் தம் சமயம் சைவந்தானென அறிந்துகொள்ளாதபடி அவரைத் தடுத்துக் கிறிஸ்தவமாதி சமயங்களுக்குப் பிடர்பிடித்துத் தள்ளுகின்றனர் அவ்வேழையரைக் கிறிஸ்தவராதியோர் இழுப்பதைக் காட்டி அங்கவீனர் தள்ளுவதே கிருஸ்தவமாதியன பெருகக் காரணமென்பதை ஆய்ந்து காண்க.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி ஆவணி-15

# பாவே கண்டுபிடித்த பாவம்.

அரசியற் கட்சியின் செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு நாட்டுக்கு நல்லபிள்ளையாக நடித்துவருபவர்களில் விநோபாபாவேயும் ஒருவர். காந்தியடிகளின் பிரதம சீடரென்றும், அவரது கொள்கைகளைச் சிறிதும் வழுவாது பின்பற்றுபவரென்றும் பாவே பெயர்வாங்கினர்.

'அவரவர் வினைவழி யவரவர் வந்தனர்' என்னும்பேருண்மையை ஏற்றுக்கொள்ளும் வலிமை மூளைக்கு இல்லாமையால் நாட்டைச் சமநிலைப் படுத்தி விடலாமென்று முயன்று திரிகிற பேரியார் பலர் இக்காலத்து மலிந்துள்ளனர். நிலம் வைத்திருக்கிறவர்களிடத்தில் சேன்று இரந்து வாங்கி நிலமில்லாதவர்களுக்குக் கோடுக்கும் பெரும் புண்ணியச் சேல்வராய் வடநாட்டுப் பாவே தேன்னுட்டுக்கு வந்திருக்கிறுர்.

தன்னுடைய தகுதி, அறிவு ஆதியவற்றையும் தான் வந்தவேலையையும் மறந்துவிட்டுச் சிலவேளைகளில் பாவே, அவருக்கு நாட்டில் இருக்கும் மதிப்புக்கேடத்தக்க நிலையில் போருந்தாததும், அவலமானதுமான கருத்துக்களை வேளியிட்டுக்கோண்டு வருகிறுர்.

சிலநாட்களுக்கு முன் ஈவேரா நடத்திய இராமர்பட எரிப்புப்

போராட்டம் பற்றி ஒரு அதிசய மான அறிக்கையைப் பாவேவெளி யிட்டார். அது, இராமர் வரலாறு போய்யானதாதலால் எரிப்பது பற்றிய முயற்சியும் அதைத் தடுப்பது பற்றிய முயற்சியும் போருளற்ற வையே என்று போதுமக்களுக்குச் சோல்லிப் போயிற்று.

இப்போழுது கோயில்களுக்கு நிலங்களை வழங்குவது பாவமேன்று ஒரு புதுப்பாவத்தைப் பாவே கண்டு பிடித்திருக்கிறார். கண்மூடித்தனமாக எதைவேண்டு மானுலும் சோல்லலாமேன்று அவர் கருதியிருப்பதற்கு நாம் வருந்தவில்லை. அவரது சோல்லைக்கேட்டு மதிக்கத் தமிழ்நாடு அவ்வளவுகீழே வந்திருக்கிறதே !யேன்றுதான் நாம் பெரிதும் வருந்துகிறேம்.

உடம்பை விட்டு உயிரேன்ற ஒன்றிருக்கிறதேன்று கண்டு அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்ட பேரியோர்கள் வாழ்ந்து வந்த நமது பாரத நாட்டில் உடம்பையன்றி வேறேன்றையு மறியாதவர்களும். வேடம் போடுகிறவர்களும், தலை வர்களாக மதிக்கப் பேற்றதனு லேயே ஆன்மீக வளர்ச்சிக்குஅடிப் படையாயுள்ள ஆலயங்களைப் பேணுதற்குப் பாவே தடைபோடு கிறுரேன்பதன்றி வேறேன்ன சோல்லஇருக்கிறது!

---

## கோவில்களுக்குக் கோடுப்பது பாவமாம்

சென்னை ஆக 20-

கோவில்களுக்கும், மசூதிகளுக்கும் நிலக்கொடை வழங்குவது பாவமாகும் என்று சென்ற வாரம் சேலம் மாவட்டத்தில் உள்ள பாப்பாரப்பட்டியில் ஒரு வழிபாட்டுக்கூட்டத்தில் பேசிய ஆச்சார்யா விநோபாபாவே கூறினார்.

தற்போது கோவில்கள் சமீன்தாரின் கொள்கைகளைக் கடைப் பிடிக்கின்றன. தங்களுடைய பணப்பெட்டிகளில் அதிகப் பணம் சேர்ப்பதற்காக உழவர்களைச் சுரண்டுகின்றன. அந்தக் கோவில்களுக்கு நிலக்கொடை யளிப்பது பாவமான செயலாகும் என்று அவர் குறிப்பிட்டார்.

# லோகமான்ய திலகர்

[தியடோர் எல். ஷாய்]

(முன்தொடர்ச்சி)

ஒன்றில் உள்ளதற்கு இணையாக இன்னொன்றில் இருக்கலாம் (அரசாங்கம் என்பது இயற்கை நியதியின் கீழ் தன் பிரஜைகள் இயற்கை உரிமைகளுக்குக் கட்டுப்பட்டு இருப்பது என்னும் அமெரிக்க விடுதலைப் பிரகடனத்தின் அடிப்படைத் தத்துவங்கள் அமைந்த கருத்து தர்மம் என்னும் கருத்தை ஒத்திருப்பது வியத்தற்குரியதே) ஆயினும் இந்தியா தன் வழியையே பின்பற்றவேண்டும். இதுவெறும் சுயநலம் ஆகாது என்பார் திலகர். தன் சொந்த வழிகளிலே அபிவிருத்தியடைந்து, தன் சொந்த வழியிலேயே உறுதியான நிலைமை, அமைதி, முன்னேற்றம் ஆகியவற்றுக்காக உழைக்கும் சுதந்திர இந்தியா உலகத்தில் நன்மைக்காக ஒரு பெரிய ஆக்கமான சக்தியாக விளங்கும். திலகர் சுயராஜ்யம் என்னும் முதல் குறிக்கோளுக்காகவே தம் வாழ்நாளைக் கழித்தார் எனினும், 'நாம் இனி அடையப் போகும் செழிப்புக்கு சுயராஜ்யம் அடிப்படையேயொழிய அதன் உச்சி அல்ல' என்று அடிக்கடி இவர் தமது மக்களுக்கு நினைவூட்டினார்.

திலகர் காரியவாதி; அரசியல் நடப்பு உணர்ந்தவர். சுதந்திர இந்தியாவுக்குப் பல சவால்கள் ஏற்படும் என்பது அவருக்குத் தெரியும்; ஆனால் தமது நாடு தன் கஷ்டங்களைச் சமாளித்து வெற்றிபெறும் என்பதில் அவருக்கு நம்பிக்கையிருந்தது. காந்திஜியைப் போல அவரும் ஆக்கமான திட்டம் ஒன்றை உருவாக்கி, சமூகச் சீர்திருத்தம் ஆதியவற்றுக்காக உழைத்தார்; எல்லாவற்றுக்கும் முதன்முதல் தேவையாக மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்பதற்கான பொருளாதாரத் திட்டத்தை வற்புறுத்தினார். தற்காலத் தொழில் நுட்பம் தொழில் வளர்ச்சி ஆகியவை பற்றி அவருக்கும் காந்திஜிக்கும் கருத்து வேற்றுமை இருந்தது; ஆனால் அநேகமாக மற்ற எல்லா

வகையிலும் நிறைவேற்ற வேண்டிய அவசியமான குறிக்கோள்கள் பற்றி இருவரும் ஒரு கருத்துடையவராயிருந்தனர். இந்தியாவின் ஒற்றுமை, அதன் மக்கள் யாவரும் ஐக்கியமாய் ஒத்துழைப்பதன் அவசியம் ஆகியவற்றை அவர் இடையறுது வற்புறுத்தினர். இது இந்தியாவின் இன்றியமையாத தர்மத்தின்பாற்படும் என்று அவர் நம்பினர்.

அவர் தம் தாய்நாட்டின் விடுதலைக்கு அயராது உழைத்தார். ஆகவே வெளிநாட்டுக்கொள்கை பற்றி எண்ணுவதற்கு அவருக்கு அவசியம் ஏற்படவில்லை. ஆயினும் இந்தியா 'உலகுக்கு ஒரு குருவாக விளங்கி' லௌகீகத் துறையிலும் தார்மீகத் துறையிலும் உலகுக்கு வலிமையளிப்பதாகவும், உலகில் உயரிய நோக்கமுடைமைக்கு ஒரு முன்மாதிரியாகவும் இருக்க முடியும் என்று அவர் நம்பினர். தார்மீக பலமே பலம் என்பதைத் திலகர் எப்போதும் நிலைநிறுத்தினர். இந்த நிலையில், அவர் ஏகாதிபத்தியத்தை எதிர்த்தது போலவே, ஆக்கிரமிப்பு எதேச்சாதிகாரம் இவை பாஸிஸமாகஇருந்தாலும் அவற்றையும் அதர்மம் என எதிர்ப்பார். பத்தொன்பதாம் நூற்றுண்டின் பழைய ஏகாதிபத்தியத்தை எதிர்த்த போராட்டத்துக்கு அவர் தமது வாழ்க்கையை அர்ப்பணித்தது போலவே, இன்றைய புதிய ஏகாதிபத்தியத்தையும் அவர் கட்டாயம் எதிர்த்திருப்பார்.

உலகத்தில் சுதந்திர இந்தியாவின் பணியைப்பற்றிய திலகரின் கருத்தை அவரேசுருங்கச்சொல்வது சிறந்திருக்கும். 1919ல் வெர்ஸேல்ஸில் கூடியிருந்த ஜனதிபதி வுட்ரோ வில்ஸனுக்கும் மற்ற உலகத் தலைவர்களுக்கும் அவர் எழுதியது வருமாறு. 'ஆசியாவின் சமாதானம் உலக சமாதானம் இவற்றை எண்ணுகையில், இந்தியா சுய ஆட்சியுடையதாகி, கிழக்கில்விடுதலைக்கு ஓர் அரணாக ஆக்கப்பட வேண்டுவது முற்றும் அவசியமாகும்'.

---

## இயந்திர சாதனங்கள்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் சர்க்கார்தொகுதியில் இந்தியாவுக்கு மொத்தம் 41.24கோடி ரூபாய் மதிப்புள்ள சுரங்க யந்திர சாதனங்கள் தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

(5ம் பக்கத் தொடர்ச்சி)

லுவதுபோல் வயல் மூங்கில் என்று சொல்லியிருப்பதன் நயமும் அறிந்து மகிழுதற்குரியதாகும்.

மணமில்லாத மலரை அணிந்திருக்கின்ற தலைவி, அம்மலரைப் போல மணங்கமழாதவளாய் மங்கைப் பருவமடையாத பேதைப் பருவத்தினளாயிருக்கின்றுளென்பதும் இங்கே நினைவு கூரத் தக்கதாயிருக்கின்றது. தலைவி பருவமடையாமை மட்டுமன்றி அவளிருக்குமிடத்துக் காவலும் ஊரும் தலைவனது கருத்துநிகழ இடங்கொடாதனவாயுள்ளனவென்பதைத் தோழி எருமையை நினைவூட்டித் தலைவனுக்கு உணர்த்துகிருள்.

மேயத்தக்கது - தகாதவற்றை உணராது எருமைக் கடாக்கள் குளத்திலுள்ள ஆம்பல் மலரைக் கடித்துக் கெடுக்கும் ஊரென்று கூறி, அவ்வெருமைக் கடாக்களைப்போல அங்குள்ள காவலரும் ஊராரும் நல்லது—கெட்டதை ஆராயாது செய்து கெடுப்பாரென்பதைத் தலைவனுக்குத் தோழி குறிப்பால் உணர்த்தினுள்.

நெறிமருப்பையும்நீலநிறத்தையும் பெருமையையும் எருமைக்குக் குறித்து ஊராரின் கொடுந்தன்மையை விளக்கி, வெறியையும் மலரையும், பொய்கையையும் ஆம்பலுக்கு குறித்துத்தலைவனின்மென்மை காதலினிமை ஆதியவற்றை விளக்கினுள் தோழி என்பது அறியத்தக்கதாம்.

## மெய்ந்நெறிக் கழகம்

இக்கழகத்தின் முதல் ஆண்டு நிறைவு விழா நாகர்கோவில் வடிவீசுரம் அம்மாசிச் சாமிகள் (சமாதி) கோவிலில் ஆக 16-ந் தேதி இரவு நடைபெற்றது. கழகத்தலைவர் தலைமை வகித்தார். கழக வெளியீடான கூட்டுவணக்கப் பாக்கள் பாடப் பெற்றன. நன்னெறிமன்றச் செயலாளர் வித்துவான் திரு வி பூதலிங்கம் பிள்ளை மெய்ப்பொருள் என்பது பற்றிச் சொற்பெருக்காற்றினர். பண்டிதர் திரு எஸ் சிவசுப்பிரமணியபிள்ளை கழகச் சார்பில் நன்றிநவின்றுர். ஆலய தீபாராதனையுடன் விழா இனிது முடிந்தது.

## ஸ்ரீ ஈசானசிவாசாரியர்

பழனி சைவசித்தாந்த சரபம் காசிவாசி சிவஸ்ரீஈசான சிவாசா

ரிய சுவாமிகள் நாகர்கோவில் இந்துக் கல்லூரியில் இம்மாதம் 23ம்நாள் ஒரு அரிய அறிவுரை நிகழ்த்தினர்கள். இப்பேச்சில் சுவாமிகள் மாணவர்களுக்கிடையில் நற்சார்பு, அடக்கம், செய்நன்றியறிதல் ஆகிய நற்பண்புகளின் அவசியத்தை வலியுறுத்தினர்கள். 24ம் தேதி கல்லூரி தமிழ் சிறப்பு (எம். ஏ.) வகுப்புக்கு சுவாமிகளுடைய கருத்துமிக்க சைவசமயப்பாடம் நடைபெற்றது. சுவாமிகள் 25-8-56அன்று மாணவர்களுக்கெழுந்த ஐயங்களுக்குத் தக்க விடைபகர்ந்து தெளிவு படுத்தினர்கள். கல்லூரியில் சைவ உணர்வு பொலிவதற்கு சுவாமிகளின் நல்லுரைகள் பெருந்துணை செய்தன.

## படம்பார்க்கும்

## டெலிபோன்

நியூயார்க்: டெலிபோனில் பேசுபவர்கள் டெலிவிஷன்திரையைப்போன்ற ஒரு திரையில் பரஸ்பரம் பார்த்துக் கொள்ள வசதியளிக்கும் ஒரு 'பட டெலிபோனை பெல் டெலிபோன் ஆராய்ச்சிச்சாலைகளைச் சேர்ந்த விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். படடெலிபோனில் சாதாரண டெலிபோன் கம்பிகளும் மிகச்சிறிய சாதாரண புகைப் படக் கருவியும் உபயோகிக்கப் படுகிறது. 2க்கு 3அங்குலம்அளவில் ஒரு திரையும் இருக்கின்றது. பல அடிகள் தூரத்திலிருந்தோ சமீபத்திலிருந்தோ இதனைத் தெளிவாகக் காணலாம். நியூ ஜெர்ஸியிலுள்ள பெல் டெலிபோன் ஆராய்ச்சிச் சாலையையும் நியூயார்க்கிலுள்ளடெலிபோன் அலுவலகத்தையும் இணைப்பதற்குத் தற்பொழுது இந்தக் கருவிகளில் ஒன்று உபயோகிக்கப்பட்டு வருகிறது. மேலும் அபிவிருத்தியும் விலை நிர்ணயமும் ஏற்பட்ட பிறகு பொதுமக்கள் வீடுகளில் உபயோகப்படுத்த இதனை அளிக்கலாமென நிர்வாகிகள் குறிப்பிட்டனர்.

---

## தங்கம், வெள்ளி

| மதுரை | ஆக-29 | |
|---|---|---|
| பாட்லா | 104 | 4 0 |
| சவரன் | 68 | 8 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | (0 0 |
| வெள்ளி 100தோலா | 175 | 8 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 0 |

## ஆடிச்சுவாதி விழா

திருச்செந்தூர் ஆக 14- இவ்வூர் ஸ்ரீஆலாலசுந்தரர் சிவாசாரிய சங்கத்தாரால் (11,12-8-56) தேதிகளில் முறையே திருமுறை விழாவும் 'ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளின் விழாவும்' வேதசிவாகம திருமுறை பாராயணங்களுடன் வெகு சிறப்புற நடைபெற்றன. ஸ்ரீ முத்தையாபாகவதர் அவர்களின், சுந்தரர் கதாகாலக்ஷேபமும் (ஸ்ரீபிரசன்னவிநாயகர் ஸ்ரீ செந்தில் முருகன் தேவார சபையாரின்) தேவாராதிதிருமுறைப் பாராயணங்களும் நிகழ்ந்தன.

---

## சிவபதம் அடைந்தார்கள்

காரைக்குடி குமு. ராம. நா. (திருப்பூர்) நாராயணன் செட்டியாரவர்கள் மனைவியும் நா. இராமநாதன் செட்டியாரவர்கள் தாயாருமான விசாலாட்சி அவர்கள் 10-8-56 காலை 7மணிக்குச் சிவபதம் அடைந்தார்கள்.

---

## நோட்டீஸ்

புதுக்கோட்டை சப் கோர்ட்டு

O. S. 31 of 1956

ப. செ. செ. கதி. செல்லப்பசெட்டியார் —வாதி

வ. பெரி. அரு. ராம. அருணசலம் செட்டியார்—3ம்பிரதிவாதி

3ம் பிரதிவாதிக்குத் தெரிவிக்கிறதாவது: வாதிக்கு லேட் வ. பெரி. அரு. ராம. இராமநாதன் செட்டியார் 14-5-45, 7-10-47க் தேதிகளில் முறையே ரூ 7500 and ரூ 1500க்கும் செய்து கொடுத்திருக்கும் ஈட்டு வட்டி கடன்கள் பத்திரப்படி ரூ 12,000மும் பின்வட்டி செலவும் கிடைக்க உம்மையும் ஸ்ரீ இராமநாதன்செட்டியாருக்கு வார்சாக 3ம் பிரதிவாதியாகச் சேர்த்து தாவாசெய்து 14-9-56க் தேதி டயம் ஏற்பட்டிருக்கிறது. உமது ஆக்ஷேபணையை அன்று தெரிவித்துக்கொள்ளவேண்டியது.

V. கிருஷ்ணமூர்த்திஐயர்

புதுக்கோட்டை 22-8-56 } அட்வகேட்

## இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசி வாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அருள் ஆணைப்படி 2-9-56ல் திருச்சி ராப்பள்ளித் தாயுமான சுவாமி திருக்கோயிலில் திருநெறிய தேவாரத் திருமுறைஇன்னிசை வாணர்கள் பதின்மர் திருமுறை ஓத, விழா நடைபெறும். மலை மேல் எழுந்தருளியுள்ள தாயுமானசுவாமி சந்நிதியில் இரவு 8 மணிக்குத் தொடங்கி இரவு முழுவதும் இன்னிசைத் திருமுறை பாடி அதிகாலையில் தாயுமானசுவாமி சந்நிதியில் நிறைவு செய்வார்கள்.

## கோவிலுக்குப் பார்சல்

புதுடில்லி ஆக 25-

மத்தியப்பிரதேசமாகாணத்திலுள்ள ஒருகோவிலுக்கு ஒரு தேங்காய், ஒருவெற்றிலை, இரு பாக்குகள் ஆகியவற்றைஅனுப்ப மாரிசத் தீவிலுள்ளஒருஇந்தியர் ரூ 71-4-0 செலவழித்திருக்கிறார்.

கடந்த ஜூன்மாதம் அங்கிருந்து அனுப்பப்பட்ட இந்தப் புனித 'பார்சல்' இங்கு சுங்க வரித் துறையினரிடம் வந்து சேர்ந்து தற்போது 'பரிமாத சாகேப், ஆச்சார்யாகபீர்பந்த், தர்மநகர், ரெய்பூர்' என்ற முக வரிக்கு அனுப்பப்பட்டுள்ளது.

இந்தப் பார்சலுக்குவிமானக் கட்டணம் மட்டும் ரூ 26-6-0 ஆகிறது.

இந்தப் பார்சலைப் பிரித்துப் பார்த்த சுங்க அதிகாரிகள் தேங்காயை உடைத்துப்பார்க்கவிரும்பினார்கள். ஆனால் அப்படிச்செய்யாமல்விட்டுவிட்டார்கள். வெற்றிலை காய்ந்து சருகாகி ஒடிந்துவிடும் நிலையில்இருந்ததால் அதிகாரிகள் மிக்க கவனமாகப் 'பார்சலை' திரும்பக்கட்டி அனுப்பி வைத்தார்கள்.

## சென்னை நீதிபதி

புதுடில்லி ஆக 25

இந்தியத்தலைமை நீதி மன்ற நீதிபதியாக திரு பி கோவிந்த மேனன் நியமிக்கப்பட்டுள்ளார் என்று இங்கு அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டுள்ளது.

திரு, பி. கோவிந்தமேனன் இப்பொழுது சென்னை உயர்நீதி மன்றநீதிபதியாகப் பணியாற்றி வருகிறார்.

## உங்களுக்குத் தெரியுமா?

1955-56ல் இந்திய சணல் சரக்குகள் ஏற்றுமதி மூலம் 118கோடி ரூபாய் மதிப்புள்ள அன்னிய நாணயச் செலாவணி கிடைத்திருக்கிறது.

இந்தியாவில் ஆண்டுதோறும் சுமார் 4,39,56,000 மணங்கு உருளைக் கிழங்கு உற்பத்தியாகிறது.

ஜில்லா தலைமை ஆஸ்பத்திரிகளில் பல் வைத்திய சிகிச்சைப் பிரிவுகளை ஏற்படுத்துவதற்கான ராஜ்ய சர்க்கார் திட்டங்களுக்கு சகாய உதவி அளிப்பதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் 151 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

பருத்தி ஜ்வுளி ஏற்றுமதி அபிவிருத்திக் கௌன்சில் இவ்வருஷம் ஜனவரி மாதத்திலிருந்து பாக்தாத், சிங்கப்பூர், லகோஸ், ஏடன், ரங்கூன், மொம்பஸா ஆகியவிடங்களில் கிளைக் காரியாலயங்களைத் திறந்திருக்கிறது.

இந்தியாவில் 1955ல் 1,20,000 ரூபாய் மதிப்புள்ள காகிதத் தயாரிப்பு யந்திர சாதனங்கள் உற்பத்தி செய்யப்பட்டன.

புனர்வாழ்விப்பு நிர்வாகம் இடம் பெயர்ந்து வந்துள்ளவர்களுக்கு 1956 ஜூன் கடைசி வரையில் கடன் தொகைகளாக மொத்தம் சுமார் 1023.32 லட்சம் ரூபாய் வினியோகித்திருக்கிறது.

1955-56ல் 20.06 லட்சம் ஏக்கரா நிலத்தில் ஜப்பானிய நெல் சாகுபடி முறை கையாளப்பட்டிருக்கிறது.

இந்தியாவில்1955-56ல் மொத்தம் 1,320 குழாய்க் கிணறுகள் அமைக்கப்பட்டன. 965குழாய்க் கிணறுகள் இயக்கப்பட்டன.

ஹோமியோபதி வைத்திய முறை அபிவிருத்திக்காகஇரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 34.50 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-47
துன்முகி-ஆவணி-22
6-9-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## பாலை

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியதறிந்து தலைவி ஆற்ருதவளாகி வருந்த அதுகண்ட அவன் அழிந்து கூறியது.

தண்புனக் கருவிளைக் கண்போன் மாமல, ராடுமயிற் பீலியின் வாடை -யோடு துயல்வர, வுறைமயக் குற்ற வூர்துஞ் சியாமத்து, நடுங்குபிணி நலிய நல்லெழில் சாஅய்த், துனிகூர், மனத்தண் முனிபட ருழக்கும், பனைத்தோ ளரும்பிய சுரும்பிற் கணைக்காற், குவளை நாறுங் கூந்தற் றேமொழி, யிவளிற் றீர்ந்து மாள்வினை வலிப்பப், பிரிவனெஞ் சென்னு மாயி, னரிதுமன் றம்ம வின்மைய திளிவே—262 :பெருந்தலைச்சாத்தனுர்

குளிர்ந்த புனத்திலேயுள்ள கருங்காக்கணத்தினது கண்போன்ற கரிய பூ, வாடைக்காற்றினுல் ஆடுகின்ற மயிற்பீலிபோல் அசைய மழைத்துளி மயங்கிய ஊர் உறங்குகின்ற நடுயாமத்திலே நடுங்குகின்ற காமநோய் வருத்த நல்ல அழகு குறைந்துதுன்பமிக்க மனத்தினளாய் முனிந்தொறுக்குங் காமநோயால் உழக்குகின்ற பணைத்தோளையும் அரும்பிய தேமலையும் திரண்ட தண்டையுடைய குவளைப்பூ மணம் கமழுகின்ற கூந்தலையும் இன்சொல்லையுமுடைய இவளைக் கைவிட்டும் பொருளீட்டும் முயற்சி நெஞ்சை வலித்தலால் என்னெஞ்சு பிரிவேனென்று சொல்லும். ஆனுல் வறுமையால் வரும் இளிவரவு அம்ம! மிகக் கொடியதாகும்.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

பார்திகழ வளர்சாம வேத மல்கப் பராசரமா முனிமரபு பயில ஞானச்,
சார்வுதர வந்தருளி யெம்மை யாண்ட சைவசிகா மணிமருதத் தலைவ
னந்தண், கார்மருவு போழில்புடைசூழ் மதின்மீதே மதியங் கடவாமை
நெடுங்கோடியின் கரந்தகையுங் கடந்தைச், சீர்நிலவு மறைஞான சம்-
பந்த னெந்தை திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

:-சிவப்பிரகாசம்-6

உரை:-'பார் திகழ - இந்நில வுலகம்விளக்கமடையவும், வளர் சாமவேதம் மல்க - ஆயிரம் சாகைகளால் வளர்ந்து கொண்டிருக்கின்ற சாமவேதம் பொலிவு பெறவும், பராசர மாமுனி மரபு பயில - பராசரமா முனிவரது மரபு இடையறாது நிலைபெறவும், ஞானச் சார்புதர-நம்போன்றவர்களுக்குச் சிவஞானமாகிய பற்றுக்கோட்டை வழங்கவும், வந்தருளி-திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து, எம்மை ஆண்ட - எம்மை அடிமையாக்கிக்கொண்ட, சைவ சிகாமணி- சைவத்தலைமணியும், மருதத் தலைவன் - மருதூருக்கு இறைவனும், அம் தண் - அழகிய குளிர்ந்த, கார் மருவு-மேகங்கள் பொருந்திய, பொழில் புடை சூழ்-சோலைகள் அருகிலே சூழ்ந்திருக்கின்ற, மதில் மீதே - மதிலின் மீது, மதியம் கடவாமை- திங்கள் கடந்து செல்லமுடியாதபடி, நெடுங் கொடியின் கரம்- உயர்ந்திருக்கின்ற கொடிகளாகிய கைகள், தகையும் - தடுக்கின்ற, கடந்தை - திருப்பெண்ணாகடத்தில் தோன்றிய, சீர் நிலவு- சிறப்புவிளங்குகின்ற,மறைஞான சம்பந்தன் எந்தை - மறைஞான சம்பந்தன்என்னுந்திருநாமத்தை யுடைய எமது ஞானத் தந்தையினது, திருவளரும் மலரடிகள்- அருட்செல்வம் வளருகின்ற மலர்போலும் திருவடிகளை, சென்னி வைப்பாம் - தலை

மேற் புனைந்து வணங்குவாம்' என்பதாகும்.

சித்தாந்த சைவஞான நூல்கள் பதினான்கனுள் சிவப்பிரகாசமும் ஒன்று. இதனை அருளிச்செய்த ஞானசிரியர் சந்தான குரவருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள் இது நூறு திருவிருத்தங்களைக் கொண்டது.

சைவசித்தாந்தத் தலைமணி நூலாகிய சிவஞானபோதம் முதனூல், அதன் வழிநூல் சிவஞான சித்தியார். சிவப்பிரகாசம் சார்பு நூலாகும். 'முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூலாகும்' எனவும் 'இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித், திரிபு வேறுடையது புடைநூலாகும்' எனவும் கூறப்பெற்ற இலக்கணங்களுக்கேற்ப இந்நூல்கள் விளங்குகின்றன வென்பதை அறிவுடையார் அறிவர்.

சிவப்பிரகாசம் இரண்டு அதிகாரங்களை யுடையது. முன்னையதாகியபொதுவதிகாரத்திலுள்ள ஐம்பது செய்யுட்களில் பாயிரம், பதி பசு பாச அவத்தையிலக்கணங்களும் பின்னையதாகிய உண்மையதிகாரத்திலுள்ள ஐம்பது செய்யுட்களில் ஆன்மா ஐந்தவத்தை யிலக்கணம், உணர்த்துந் தன்மை, ஞானவாய்மை பயன், புனிதன் நாமம், அணைந்தோர் தன்மையும் விளக்கப்பெற்றுள்ளன.

சிவஞானபோதம் - சிவஞான சித்தியார் ஆகிய நூல்களின் பிழிவாகவும், எளிய செய்யுள் நடையில் பொருள்களைச் சுருங்கச்சொல்லி விளங்கவைப்பதாகவும் இந்நூல் இருப்பதால், முத்திப்பேற்றில் விருப்புடைய சாதகர்களுக்கு எளிதில் சீவன் முத்திப்பேற்றை வழங்கவல்லது இது என்பது உணரத்தக்கதாகும். இதனாலேயே 'சிவப்பிரகாசத் தொன்னூல், ஆங்கதுவே சீவன் முத்தனுக்குவிக்குமந் நாலே, ஓங்குகநீ டூழியும் பின்னும்' என்று சிவஞான வள்ளலார் கூறினர்.

மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் எட்டு நூல்களை உமாபதிசிவம் அருளிச் செய்தார். அவற்றுள் முதலாவது சிவப்பிரகாசம். இறுதியில் இருக்கும் சங்கற்ப நிராகரணத்துள் மற்றைச் சமயவாதிகளின் கருத்தறிந்து அவருட் சிவாத்துவித சைவரை முன்னிலைப்படுத்தி, 'வெண்ணெ

யம்பதிதிகழ்மெய்கண்டவனருள் உண்ணிலே யுடையாயேனொருவ னுரைத்த,சிவப்பிரகாசச் செழுந் தமிழுண்மையை, அருளுட னாய்ந்து கொள்ளத், திருவருள் வினவல் திருந்திடுமன்றே' என எடுத்துக்காட்டியருளியதாய் இந்நூல் திகழ்ந்து ஆசிரியரின் ஆதிஅந்த உபதேசமாய் விளங் கிக்கொண்டிருக்கின்றது.

சந்தான பரமகுரவரான மெய் கண்ட தேவநாயனரிடம் அரு ளுபதேசம் பெற்றவர் அரு ணந்திசிவம். அவரிடம் மறை ஞானசம்பந்த சிவமும் அவரிடம் உமாபதிசிவமும்ஞானேபதேசம் பெற்றார்கள். தில்லை மூவா யிரவருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள், சிற்றம் பலமுடைய நாயனாரை நாடோ றும் பூசித்த பெரும்புண்ணியத் தின் பயனாக அவருக்கு மறை ஞானசம்பந்த சிவம் அருளாசி ரியரானார்.

உமாபதியார் எந்நாளும்போல ஒருநாளில் அம்பலவாணரைப் பூசித்துவிட்டு அடியார் புடை சூழச்சிவிகையேறித் திருவீதி யின் வழியாகவிருதுகளுடன் வந் தார். அவ்வேளையில் மறைஞான சம்பந்தரின் திருவருட் பார் வைக்கு அவர் இலக்காயினர்.

'பட்ட கட்டையிற் பகற் குரு டொன்று சிட்டர் சூழ்தரச் செல் லுதல் பாரீர்' என்ற சொல் சிவி கையிற் செல்லும் உமாபதியார் திருச்செவியில் விழ, அவர் சிவி கையிலிருந்து குதித்து வந்து மறைஞான சம்பந்தரின் திருவடி களில் அடியற்ற மரம்போல விழுந்து விளங்கினர்.

சீடராது இருவினையொப்பு. மலபரிபாகம், சத்திநிபாதக் குறிப்புக்களை அறிந்து ஆசாரி யர், அவருக்குச் சிவஞானேப தேசமும் சிவஞானபோத முத லிய சாத்திரோபதேசமும் செய்து உமாபதிசிவம் என்னும் தீட்சாநாமமும் வழங்கினரென் பது வரலாறு. அக்குருமூர்த்தி களின் அநுக்கிரகப் பயனாகச் சிவப்பிரகாச நூலை ஆசிரியர் ஆக்கி நமக்குவழங்கியுள்ளார்.

இந்நூற் பாயிரம் பதின் மூன்று திருவிருத்தங்களையுடை யது. மங்கல வாழ்த்தாயமைந்த இப்பகுதியில் நூலாசிரியர்தமது ஞானசிரியருக்குச் சொல்லும் துதிப்பாடலே மேலே காணப் பெறுவதாகும். இப்பாடலுக்கு மன்னிய பேரருள் வடிவுகொண் டிருபதஞ், சென்னியில்வைத்த தேசிகர் வணக்கம்' என்று விளக் கந் தருகிறார் ஒரு பெரியார்.

மறைஞான சம்பந்தப் பெருமான் தோன்றி வந்ததனால் நான்கு விளக்கங்கள் நிகழ்ந்தன வென்று ஆசிரியர் கூறினார். அவை பார்திகழுதலும், சாமவேதம் மல்குதலும், பாராசர முனிமரபு பயிலுதலும், ஞானச்சார்பு தருதலுமென்பனவாம். இவை முறையே சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய நான்கு நெறிகளையும் உணர்த்த வந்தவர் அவர் என்பதைக் குறிப்பாலுணர்த்திக் கொண்டிருப்பது, அறியவேண்டுவதாகும்.

பார்திகழ என்ற பொதுப் படை வாழ்த்து முதற்படியாகிய சரியையையும், கிரியையை வற்புறுத்திச் செல்வதாகிய வேத வாழ்த்து இரண்டாவது படியாகிய கிரியையையும். மனனசீலராகிய பராசர முனிவரது பரம்பரை வாழ்த்து மூன்றுவதாகிய யோகத்தையும் ஞானச்சார்பை நல்கும் நல்வாழ்த்து ஞானத்தையும் உணர வைப்பனவாகும்.

பூவுலகம் விளக்கமுறுதற்குச் சைவம் விளக்கமுற வேண்டும்- அது, மறைஞான சம்பந்தரால் ஆகியது. அவர் சாமவேதமுடையார். பராசர முனிவர் கோத்திரத்தார். அம்முனிவர் வசிட்டருக்குப் பேரரும் சக்திக்குப் புதல்வரும் வியாசருக்குத் தந்தையும் சுகருக்குப் பாட்டனுரும் ஆவார்.

'பார்' என்னுஞ் சொல் ஆகு பெயராய்ப் பக்குவான்மாக்களை உணர்த்தத் 'திகழ' என்பது அறியாமையின் நீங்கி அருள் பெற்றிருளிருதலைப் புலப்படுத்தியது.

மதிலின்மீது திங்களைச்செல்ல வொட்டாது கொடிகள் தடுக்குமென்பதால் ஞானநெறியில்உயிர்களைச் செல்ல வொட்டாது உலக போகங்கள் தடுக்குமென்பதைப் பெறவைத்து மறைஞான சம்பந்தரது திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாமென்பதால் அத்தடையை ஆசாரிய மூர்த்திகளது சிவபோகத் திருவை வளர்க்கின்ற பாத சேகரத்தால் அகற்றி முத்தித்திருவைப் பெறலாமென்பதை உணர்த்தியருளினார்.

பரமஞான குரவரான மறைஞான சம்பந்தப் பெருந்தகையாரது திருநாளாகிய இன்று அவரை நினைந்து இன்புறுவது நல்லதல்லவா?

## உருளைக்கிழங்கு சாகுபடி

இப்போது இந்தியாவில் சுமார் 5,80,000 ஏக்கராவில் உருளைக்கிழங்கு சாகுபடியாகிறது.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

'அத(தமிழர்ச்சனையி)ன் எதிர்ப்பாளர்கள் ஆழ்ந்து சிந்திக்க வேண்டுமென்று விரும்புகின்றேம்' (17-7-56 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். நானும் ஓரெதிர்ப்பாளன். அவ்வர்ச்சனைக் கொள்கையைப் பகுதி பகுதியா[யெடுத்து இயன்றவரை நான் ஆழ்ந்து சிந்தித்து ஆராய்ந்தே கண்டிக்கிறேன். அக்கண்டனம் தவறுடையதாகலாம். ஆழ்ந்து சிந்தித்தல் என்பதாவது என்னிடமிருப்பது சத்தியம். என் புத்தகமும், இந்த நீண்ட கட்டுரையும் அதற்குச் சான்று. ஆனால் அவ்வர்ச்சனையை மறுத்து நிற்கும் காரணங்களுள் ஒன்றையாவதுஎடுத்துச் சிந்திக்கிறாரா அவர். இல்லவே யில்லை. ஆழ்ந்து சிந்தித்துத் தீர்வு காண்பது என் தருமம். மறுப்புக்களை மறுக்கமாட்டாமல் மறைக்கமுயன்று தாம் சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பது அவர் தருமம்.

ஒரு சமயத்தில் ஒரு புதுமையை நுழைக்க விரும்பினல் அதற்கும் அச்சமய சாத்திர ஆதாரம் அவசியம். அஃதிருந்தாற்றான் அப்புதுமை புகுத்தப்படலாம். நவீனருக்கு அஃதகப்படவில்லை, ஆகலின் அந்நிய தேச சரித்திரமொன்றை அவர் காட்டுகிறார். சைவசாத்திரத்துக் கொவ்வாத சாத்திரப் பகுதியெதுவுஞ் சான்றாகாது. அன்றி அவர்காட்டுஞ்சரித்திரம் அபத்தமுமாம். என்னை? கத்தோலிக்க கிறிஸ்தவமே ஆதிக்கிறிஸ்தவம். அதிலிருந்து தெறித்துப்போன இடைக்கிறிஸ்தவம் புரோடஸ்டாண்டுக் கிறிஸ்தவம். அவ்விரண்டும் பெயரால் ஒன்று; ஆயினுந் தம்முள் பல வித்தியாசங்களையுடையன. அவ்வித்தியாசங்கள் சாமானிய மல்ல. அவ்விரு கிறிஸ்தவங்களும் அரசியலிற் சம்பந்தித்துத் தம்முட் பகைத்து இரத்தவெள்ளம் பெருக்கெடுத்தோடு மளவுக்குப் போரிட்டு அல்லற்பட்டன. அவ்

வாதிக்கிறிஸ்தவம் இலத்தீன் மொழியை விடவில்லை. அது அம்மொழியிலுள்ள தன் கடவுள் அல்லது அவருடையபிரதிநிதியின் வாக்கு, அதிற்பொதிந்துள்ள அர்த்தம் என்னும் இரண்டையுஞ் சேர்த்தே மதிக்கிறது. அவ்விடைக் கிறிஸ்தவமோ அவ்வாக்கை மதியாமல் அவ்வர்த்தத்தைமாத்திரம் மதிக்கிறது. திருமுறைப் பாடல்களாகிய வாக்கை மதியாமல் அதனர்த்தத்தை மாத்திரம் மதிக்கிற புத்திபோன்றதே அந்தப்புத்தி. இங்கிலாந்தை மேரி, எலிசபெத் என்ற இரண்டரசிகள் ஆண்டனர். மேரி அவ்வாதிக் கிறிஸ்தவச்சி. எலிசபெத் அவ்விடைக் கிறிஸ்தவச்சி. மேரி இலத்தீனை மதித்து நாட்டையாண்டவள். மக்களும் அவளை யனுசரித்து அம்மொழியை மதித்தனர். எலிசபெத் அம்மொழியை வெறுத்து நாட்டை யாண்டனள். மக்களும் அவள் வழிச்சென்று அம்மொழியை வெறுத்தனர். அவ்விடைக் கிறிஸ்தவமே நாளிதுவரை அந்நாட்டு அரசாங்க சமயமாயிருந்து வருகிறது. கடவுள்வாக்கென அதில் எதுவுமில்லை. அவரது நூல் விவிலிய மென்பது. ஒவ்வொரு மொழியிலும் அதன் பெயர்ப்புநாலே வழங்கும். எல்லாப் பெயர்ப்புக்களும் அவ்வம்மொழியில் வல்ல மனிதரின் வாக்கே. ஆகலின் 'இது கடவுள் வாக்கு' எனக் கூறி ஏதேனுமொரு பிரமாணங் காட்ட அக்கிறிஸ்தவருக்கு யோக்கியதை கிடையாது. அவர் அங்ஙனம் கடவுள் வாக்கைப் புறக்கணித்த காரணத்தால் அவ்விடைக்கிறிஸ்தவத்தினுள் பலபல பிளவைகளுளவாயின. ஆனால் கடவுளிடமிருந்து வெளியான வாக்கையும் அவ்வாதிக் கிறிஸ்தவர் மதித்து வருவதால் அக்கிறிஸ்தவத்துட் பிரிவுகள் கிடையா. உலகெங்குமுள்ள அக்கிறிஸ்தவரனைவருக்கும் போப் என்பவரே பரம்பரை ஆசாரியரா யிருந்து வருகிறார். அக்கிறிஸ்தவரிடமுள்ள ஒற்றுமை, கட்டுப்பாடு, ஆசாரியரின் ஆணைக்கடங்குதல் முதலிய நலன்கள் வியப்புக்குரியன ஆகவே ஆங்கிலேயர் கடவுள்வாக்கை மதியாதொழுகுவதை யெடுத்துக் காட்டிச் சைவ மக்களையும் அன்ன பாதகத்துக்குள்ளாமாறு செய்ய முந்துகிறார் நவீனர். அது கொடிது.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

**துன்முகி ஆவணி-22**

# ஆவணி மூலம்

அங்கயற் கண்ணி பங்களுகிய ஆலவாய்ச் சோக்கேசனது அருள் விளக்கம், எளிமையில் அடியவர் களைச் சாருகின்ற நாள் ஆவணி மூல நாள். அறுபத்து நான்கு கலை களையும் ஐயந் திரிபறக் கற்றும் தேன்பாண்டிநாட்டின் முதலமைச்சர் பதவியைப் பெற்றும் சித்த நிறைவு பெருது மணிவாசகர் அமைதி தேடி நின்றுர்.

பாண்டியனது குதிரை லாயத்திற்கு வந்ததோரு சிறு வறுமை, மணிவாசகரது மனஅமைதிக்குக் காரணமாகி அவருக்கு நல்வாழ்வைத் தந்துவிட்டது அளவில்லாத போன்னை யெடுத்துக்கோண்டு அரசனுணைப்படி குதிரை வாங்கப் போன வாதவூரர், அத்தனை போன்னையும் ஆண்டவன் திருப்பணிக்கு ஆக்கினுர்.

தன்னை மறந்து தன்னுமங் கேட்டு நின்ற மணிவாசகருக்குத், தலைவன்பாண்டியனேன்றஉணர்வு எப்படி உண்டாகும்? 'அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லாமும், குன்றே யனையாய் என்னை யாட்கோண்ட போதே கோண்டிலையோ' என்ப தல்லவா அவர் திருவாக்கு?

அருளுபதேசம் பெற்ற அந்த வேளையிலேயே தம்மை உணர்ந்து,

தமை உடைய தன் உணர்ந்தார் அவராதலின் தம்மிடமுள்ளதும் தம் மதுமான உடல், போருள், ஆவியாகிய எல்லாம் ஆசாரியனுய் வந்த ஆண்டவனுக்குக் கோடுத்துவிட்டார் அவர்.

தன்னுயிர் தானறப்பெற்றுநின்ற அவருக்குப் பாண்டியனுக்கு அமைச்சரேன்ற உணர்வு தலைப்பட இடமில்லையல்லவா? எனவே அவனுக்குக் குதிரைவாங்க வந்த எண்ணம் மட்டும் எப்படி அவருக்கிருக்க முடியும்? அதனல் பாண்டியன்போருள் ஆண்டவன் திருப்பணிக்கு ஆகிவிட்டது.

குதிரை வாங்கச்சேன்ற அமைச்சர், உலகத்திலேயே சிறந்தனவாயுள்ள குதிரைகள் பலவற்றேடு மீளுவாரேன்று பாண்டியன் எதிர்பார்த்துக்கோண்டிருந்தான். அவனுக்கு வாதவூரரின் மனவேறுபாட்டையும் போருட் சேலவையும் பற்றி ஒற்றர்கள் வந்துஉரைத்தார்கள். ஏமாற்றமடைந்த பாண்டியன் பேருஞ் சினங் கோண்டு குதிரைகளுடன் வரும்படி வாதவூரருக்கு ஓலையனுப்பினுன்.

ஆன்மநாதரிடம் பாண்டியனது ஓலைச்சேய்தியை விண்ணப்பித்தார் மணிவாசகர். ஆவணி மூலத்திற் குதிரைகள் வருமேன்று பாண்டியனுக்குச் சேய்தி அனுப்பும்படி குருந்தடிப் பேருந்தகை அடிகளாருக்கு அறிவித்தார்.

பலநூற்றுண்டுகளுக்குமுன்னே ஓராண்டில் ஆவணி மூல நாள். மதுரை நகரின் புறத்திலே வானம் மறையத் தூசி எழும்பியது. ஆயிரக்கணக்கான குதிரைகள் அனைத்திலக்கணங்களு முடையனவாய் அரண்மனையை நோக்கி வந்தன. அவற்றின் நடுவில் ஒரு வேளைக் குதிரையில் ஏறிச் சோக்கேசர் குதிரை வீரனுக மதுரைநகர் மக்கள்சேய்த தவத்தின் பயனேன்று சோல்லும்படி வந்தார். அந்த ஆவணிமூல நாளாகிய **13-9-56** வியாழக்கிழமையன்று அப்பெருமானை வழிபட்டு அருள்பேறுவோமாக

## வரி உயர்கிறது

புதுடில்லி ஆக 31

மிகமெல்லிய ரகத் துணிமீது ('சூபர்பைன்' ரகத்துணி மீது) இதுவரை சதுரகெசம் ஒன்றுக்கு இரண்டரை அணாவீதம் விதிக்கப்பட்டுவந்த கலால் வரி 4அணாவாக உயர்த்தப்படுவதாகவும், மெல்லிய ரகத்துணி மீது ('பைன்' ரகத்தின்மீது) இதுவரை சதுரகெஜம் ஒன்றுக்கு ஒன்றேமுக்காலணா வீதம் விதிக்கப்பட்டு வந்த கலால்வரி 3அணாவாக உயர்த்தப்படுவதாகவும்இந்திய அரசாங்கம் இன்று அறிவித்தது. இந்திய அரசாங்கத்தின் இம்முடிவு இன்று இரவு (ஆகஸ்டு 31ம் தேதிஇரவு) 12 மணியிலிருந்து அமுலுக்கு வருகிறது.

இதுமட்டுமின்றி நடுத்தர ரகத்துணி ('மீடியம்'ரகத்தின்) மீது சதுரகெசம் ஒன்றுக்கு ஓரணா வீதம் விதிக்கப்பட்டு வந்தவரி இரண்டணாவாகஉயர்த்தப்படுகிறது; இதன்படி இவ்வரியில் ஓரணாஅதிகப்படுகிறது.

வேட்டிகள், சேலைகள் நீங்கலாக மற்ற எல்லா முரட்டுரக ('கோயர்சு'ரக) துணிகளின் மீதும் இதுவரை சதுரகெசம் ஒன்றுக்கு ஓரணாவீதம் விதிக்கப்பட்டு வந்த வரி ஒன்றரை அணாவாக உயர்த்தப்படுகிறது. இதன்படி முரட்டுரகத் துணிகளின் வரியில் சதுரகெஜம் ஒன்றுக்கு அரையணா அதிகரிக்கப்படுகிறது. முரட்டு ரகத்தைச் சேர்ந்த வேட்டிகளின் மீதும் சேலைகளின்மீதும் இப்பொழுது சதுரகெஜம் ஒன்றுக்கு அரையணா வீதம் விதிக்கப்பட்டுவரும் கலால்வரியில் எம்மாற்றமும் இல்லை.

## ஓய்வுகால ஊதியம்

சென்னை செப் 3

தனிப்பட்ட கல்வி நிலையங்களிலும், தலத்தாபனப் பள்ளிகளிலும் அலுவல் பார்க்கும் ஆசிரியர்களுக்குப் பயன் தரக்கூடிய சேமநலநிதி இன்சூரன்ஸ் ஓய்வுகால ஊதியத்(பென்ஷன்) திட்டமொன்றைக் கொண்டுவர சென்னை அரசாங்கம் முடிவு செய்துள்ளது. பள்ளி ஆசிரியர்களின் ஓய்வுகால உதவிஊதியத் (பென்ஷன்) திட்டம் அரசாங்க ஊழியர்களின் ஓய்வுகால உதவி திட்டத்தைப் போன்று இருக்கும். அத்துடன் ஆசிரியர்களுக்காகக் கட்டாய இன்சூரன்ஸ் திட்டம் ஒன்றும் கொண்டுவரப்படும்.

## வருமானம் இல்லாத ஆலயங்கள்

சென்னை ஆக 28-

சென்னைமாகாணத்தில் உள்ள போதிய வருமானமில்லாத 'ஏழைக்'கோவில்களுக்கு அவைகளை மாராமத்துச்செய்யவும்புதுப்பிக்கவும் ஆண்டுதோறும் மாகாண அரசாங்கம் பணம் ஒதுக்கும்.

சென்னைமேல்சபையில் இந்து அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் திரு பி பரமேசுவரன் இதை இன்று அறிவித்தார். அவர் மேலும் கூறியதாவது:

கடந்த இரண்டு ஆண்டுகளில் இதற்காக அரசாங்கம் 4 லட்சம் ரூபாய் ஒதுக்கியுள்ளது. இதற்கான திட்டங்களை அளிக்குமாறு இந்து அறநிலைய ஆணையாளர் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார்.

சென்னை மேல்சபையில் வந்த தனிப்பட்ட உறுப்பினர் ஒருவர் மசோதாவின் மீது நடைபெற்ற விவாதத்தில் பேசுகையிலேயே அமைச்சர் இதை அறிவித்தார். 1951 செப்டம்பர் 30ஆம் தேதியன்று இந்து அறநிலையக் குழுவானது ஒரு அரசாங்கத்துறையாக மாற்றப்பட்டபோது அதனிடம் இருந்த உபரிநிதியானது 'ஏழை'க் கோவில்களின் மராமத்துக்காகவும் செலவிடப்பட வேண்டும் என்று இந்தத் தனிப்பட்டவர் மசோதா கூறுகிறது. திரு பாலசுப்பிரமணியஐயர் என்பவர் இந்தப் பிரேரணையைக்கொண்டு வந்தார்.

ஆலயங்கள் நல்ல முறையில் வைக்கப்படவேண்டும் என்பதில் உறுப்பினர்களைப்போல் அரசாங்கமும் ஆவலாய் இருக்கிறது என்று அமைச்சர் உறுதிகூறிய தன்பேரில் மேற்கண்ட உறுப்பினர் தமது தீர்மானத்தைத் திருப்பிப் பெற்றுக் கொண்டார்.

## இயந்திர சாதன உற்பத்தி

1955ல் இந்தியாவில்2,35,000 ரூபாய் மதிப்புள்ள ரசாயனப் பொருள் யந்திர சாதனங்களும் மண்பாண்டத் தயாரிப்பு யந்திர சாதனங்களும் உற்பத்தி செய்யப்பட்டன.

## ஈய உற்பத்தி

இந்தியாவில் ஈய உற்பத்தி 1952ல் 1131.6டன்னாக இருந்தது 1955ல் 2234.4 டன்னாக அதிகரித்தது.

## இலக்குமிபுரம்

சொக்கலிங்க வித்தியாசாலையின் ஸ்ரீ மீனுட்சிசங்கக் கூட்டம் 27-8-56 மாலை ஒக்கூர் சோமசுந்தரம்செட்டியார் உயர்தர ஆரம்பப்பள்ளி நிர்வாகஸ்தர் உயர்திரு சி க அரு கரு சோமசுந்தரம் செட்டியாரவர்கள் சீரிய தலைமையில் நடைபெற்றது. இறை வணக்கத்திற்குப் பின் மாணவ மாணவிகளின் நடிப்பு, பாட்டு, கும்மி, கோலாட்டங்கள் நடைபெற்றன. தலைவரவர்கள் மாணவ மாணவிகளின் திறமையைப் பாராட்டிப் பேசினர்கள். தலைமை ஆசிரியர் ஜி சுவாமிநாதய்யர் தலைவரவர்களுக்கு மாலையணிவித்து நன்றி கூறியபின் நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## காலமானர்கள்

சென்னை ஆக 27

தமிழ் மொழியிலும் வட மொழியிலும் தேர்ச்சி பெற்ற வித்வானை திரு, வை மு. கோபால கிருஷ்ணமாச் சாரியார் நேற்றிரவு திருவல்லிக்கேணியில் உள்ள தமது இல்லத்தில் காலமானர். இவருக்குவயது 74. கட்டிடக்கலைநிபுணரான திரு வி கே நாசிம்மன் இவரது ஒரே புதல்வராவார்.

காலஞ்சென்ற திரு, வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் கம்பராமாயணம், வில்லிபாரதம், திருக்குறள், நன்னூல் முதலிய பலவற்றிற்கு உரை எழுதி வெளியிட்டதன் மூலம் தமிழ் மொழிக்குப் பெருந்தொண்டு செய்துள்ளார்.

இவர் சென்னைப்பல்கலைக்கழக லெக்சிகன் பதிப்புக் குழுவில்ஒரு உறுப்பினராக இருந்தார்.

---

## கட்டணம் உயர்வு

ரூபாய்க்கு 100 காசு புதுக் கணக்குக்காக கார்டு கவர் விலை உயர்த்தப்பட்டுள்ளது. 1957 எப்ரல் முதல் அதிகவிலை. கார்டு 5காசு ரிப்ளை கார்டு 10காசு, கவர் 13காசு புக்போஸ்டு 6காசு.

## பேனு மை தயாரிப்பு

இந்தியாவில்1955ல்66,13,200 புட்டி (ஒவ்வொன்றும் 2 அவுன்ஸ்) பௌண்டன் பேனு மை தயாரிக்கப்பட்டது.

# கலித்தொகையிற் கண்ட கடவுட் காட்சி

(நாதன்)

சங்கமருவிய எட்டுத்தொகை நூல்களில் 'கலித்தொகையும் ஒன்று; ஐந்திணை பற்றிய அகவொழுக்கங்களைத் திறம்படக் கூறும் சங்க இலக்கியங்களில் கலித்தொகை முன்னிடம் பெறும் தன்மையை உடையது. அகத்திணை பற்றியன ஐந்தும், புறத்திணை பற்றியன மூன்றுமாக எட்டுத்தொகை நூல்கள் இருக்கின்றன.

கலித்தொகை, கற்று வல்ல புலவருக்குப் பெருவிருந்தாகக் கவின் தருவதனாலேயே இதனைக் 'கற்றறிந்தார் ஏத்தும் கலி' என்று அறிஞர்கள்பாராட்டுகின்றார்கள். கடவுளது உலகப் படைப்பில் ஆணும் பெண்ணும் கூடி மகிழ்கின்ற அகவொழுக்கத்தின் பண்புகளைத் தமது தேர்ந்து தெளிந்த அறிவினால் செய்யுட்களில் வைத்து வெளிப்படுத்துகின்ற பெரும் பாவலரின் உதவி, கடவுளது திருவுள்ளத்தை நன்கு வெளிப்படுத்தும், புறக்காட்சியாக இருந்து அளவிட்டுமுடியாத நன்மையைத் தருகின்றது.

'அகத்துறை பற்றிய ஐந்து திணைகளும், அவற்றைச் சார்ந்த கருப்பொருள், உரிப்பொருள்களும் கடவுளைக் காட்டும் வாயில்களே' என்பதை ஆய்ந்தறியும் ஆற்றலுடையார் நன்கறிவர். கதிரவனின் தோற்றத்தையும், வெண்மதியின் தண்ணொளியையும், நிலத்தின் பரப்பையும், நீரின் ஆழத்தையும் நெருப்பின் வெப்பத்தையும், காற்றின் நிறைவையும், வானின் ஆழ்ந்தகன்ற உயர்வையும்கண்ட அறிஞர், கடவுட் பொருளைக் கண்டவராகவே மகிழ்கின்றனர்.

ஐம்பெரும் பூதங்களும், கதிர் மதியாதிய வானியக்கப்பொருள்களும், உலகியல் தோற்ற நிலைகளுக்கு உதவியாயிருத்தலால், அத்தோற்ற நிலைகளின் அடிப்படைக் காரணப் பொருளாகிய கடவுட் பொருளை, அக் காட்சிப் பொருள்களுக்குள் வைத்து நுணுகிக் கண்டனர் ஆன்றோர்.

எனவே, கலித்தொகையிற் காணப்பெறும் உலகியல் நெறிக

ளும்கூடக், கருதிநோக்குவார்க்குக் கடவுட் காட்சியாகவே காணப்பெறும். எனினும் வெளிப்படையாகக் கடவுள் வாழ்த்தில் காணப்பெறும் சில நுட்பங்களை ஈண்டுக் காண்போம்.

இக்கடவுள் வாழ்த்துச் செய்யுளை இயற்றிய ஆசிரியர் 'நல்லந்துவனூர்' என்பார். ஐந்திணைக் கலிப்பாக்களில் நெய்தற் கலிப் பாக்களும் இவரியற்றியனவே, என்பது முன்னைமுடிபு, ஆனால் தற்கால ஆராய்ச்சியாளர்களிற் சிலர், 'கலித்தொகையின் ஆசிரியர், ஐவரல்லர்; பலர்' என்று கூறுகின்றார்கள்.

கலித்தொகைக் கடவுள் வாழ்த்து, சிவபெருமானைப் பற்றியது. 'சிவபெருமானது சிறப்புத் திருமேனி அருவநிலைக்கும் அப்பாற்பட்டதாயினும் அவனது பொதுத்திருமேனி உருவ நிலையானது' என்னும் தத்துவத்தை, இதுநன்குவிளக்கு கின்றது. வாக்குக்கும், மனத்திற்கும் காயத்துக்கும் எட்டாத கடவுள்,ஆன்மாக்களுக்குஅருள் புரியும் பொருட்டு, அம்மூன்றிற் கும்அகப்படுபவனாக ஆவானென் பது ஆன்றோர் கருத்து.

இறைவனது பலவேறு திருவுருவங்களில், உலக இயக்கத்திற்குக் காரணமாகிய சிறப்புத் திருவுருவம், ஆடல்புரியும் கூத்தத் திருவுருவமே. இதனை, விஞ்ஞானத்தில் வல்ல பேரறிஞரும் ஒப்புகின்றனர். ஒத்த அன்பும் பண்பும் உடைய ஆடவன். பெண்மகளது உலகியல் ஒழுக்கமாகிய ஐந்திணை நெறிகளைக் கூறப்புகுந்த நூலுக்கு, உலகியல் ஒழுக்கத்தை நிகழ்த்துவிக்கும் கூத்தப்பெருமானைப் பற்றிய கடவுள்வாழ்த்துக் கூறுவது சாலப்பொருந்துவதன்றோ?

உலகத் தோற்றதின், முதற் பகுதி 'நாதம்' என்பது. சிவமும் சத்தியுமாக இருக்கும் குண குணிப் பொருள்கள், தொழிற் படத் தொங்கியதும், வெளிப் படும் முதல் தோற்றம் நாதமாகும். நாதாந்தத்தில் இருப்பவன் ஆண்டவன்' என்னும் கருத்து இதனைப் புலப்படுத்துவதே. அந்நாதத்தின் வடிவங்களாக வெளிப்பட்டன மறைகள்.

நன்னெறி யறிந்த அருளுடையார் பொருட்டு, ஆண்டவன் வேதத்தை அருளிச் செய் தான். அது. அவனது பெருங் கருணையைக் குறிப்பது. கங்கையைச் சடையில் அடக்கியிருப்

பது, அவனதுசெயற்கருஞ்செய லைக் காட்டுகின்றது. முப்புரந் தீ மடுக்கச் செய்தது பேராற் றலை வெளிப்படுத்துவது. கூளி யோடாடியது, எனைத்தையும் வெல்லும் இயல்பை அறிவிப் பது. மணிமிடறு. அழியாத் தன்மையை விளக்குவது. இவ் வனைத்துப் பண்புகளையும் உடை யான் இறைவன் என்பதைக் கடவுள் வாழ்த்து முதற் பகுதி யில் கூறுகின்றார். அது 'ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து, தேறுநீர் சடைக் கரந்து திரிபுரந் தீமடுத்துக் கூறுமற் குறித்ததன்மேற் செல் லுங் கடுங் கூளிமாறுப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி' என்பதாகும்.

அடுத்த ஒன்பது வரிகள், 'ஆண்டவனது 'கொடுகொட்டி பாண்டரங்கம், காபாலம்' என் னும் மூவகைத் திருக்கூத்துக்க ளின் சிறப்புக்களைக் கூறி, அவற்றை ஆடும்பொழுது, உட னிருக்கும் அம்மையார், கூத் திற்குத் தாயகமாகிய தாளத் தின், இறுதி, இடை, எடுப்பு என்பவற்றைக் குறிப்பனவாகிய சீர், தூக்கு, பாணி, ஆகியவற் றைத் தருவாளோ' என்றுவினவு கின்றன.

'படைப்புத் தொழிலுக்குரிய கூத்தாட்டிலே, உமையம்மை யார் பாணியுந், தூக்குஞ், சீரு மாகியவற்றைத் தரவும், அழித் தற்றொழிலுக்குரிய கூத்தாட் டிலே, அவற்றை அம்மையார் காப்பாற்றவும், காத் தற்றொழி லுக்குரிய கூத்தாட்டிலே அம் மையாரோடு கூடிய வடிவு கொண்டு ஆண்டவன் அருள் செய்யவும் ஆகிய நிகழ்ச்சிகள் நிகழுகின்றன' என்பது இறுதி யடிகளின் கருத்து.

பதினேழு வரிகளையுடைய கலித்தொகைக் கடவுள் வாழ்த் துச்செய்யுள் 'கடவுட் காட் சிக்கு இருப்பிடமானது' என்று கூறுவது பொருந்தும். நூலி னுட் பல இடங்களில் கடவுளைப் பற்றிய பல கருத்துக்கள் குறிப் பிலும் வெளிப்படையிலும் சிறப்புடையன வாயிருப்பதைக், கற்று மகிழவேண்டுவதுஅறிஞர் கடன்.

## சரக்குகள் ஏற்றுமதி

சீனாவைச் சேர்ந்த திபேத் பிரதேசத்துக்கு இந்தியா 1955–56ல் 2.64 கோடி ரூபாய் மதிப்புள்ள சரக்குகளை ஏற்று மதி செய்திருக்கிறது.

சென்னைப் பதிவுஎண் 2099 செட்டிநாடு

## சேது சமுத்திரத் திட்டக் குழு அறிக்கை

சென்னை ஆக 27–

சேதுசமுத்திரத்திட்டம் பற்றிய குழுவின் அறிக்கை மத்திய அரசாங்கத்தாரால் பரிசீலனை செய்யப்பட்டு வருவதாக சென்னை மாராமத்துத்துறை அமைச்சர் திரு என் ஆர் சேதுபதி இன்று சென்னை மேல்சபையில் அறிவித்தார்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இது சேர்க்கப்படலாம் என்றும் அவர் கூறினார்.

## டெலிவிஷன் விற்பனை

நியூயார்க்: எடுத்துச் செல்லக் கூடிய டெலிவிஷன் செட்டுக்கள் விரிவான முறையில் பொது ஜனங்களால் அங்கீகரிக்கப்படுவது தொழில் அபிவிருத்தி அடையச் செய்கிறது என அமெரிக்காவிலுள்ள டெலிவிஷன் செட் தயாரிப்பாளர்கள் கூறுகின்றனர். ஆண்டின் விற்பனையில் 20சத விகிதம் இப்பொழுது எடுத்துச் செல்லக் கூடிய செட்டுகள் தான். தற்பொழுது ஆண்டொன்றுக்கு 70லட்சம் செட்டுகள் விற்பனையாவது 1 கோடி செட்டுகளாக அதிகரிக்க எடுத்துச் சொல்லக் கூடிய செட்டுகள் மூன்று ஆண்டுகளில் வகை செய்யுமென டெலிவிஷன் அதிகாரிகள் கூறுகின்றனர்.

## அரசாங்கக் கடன் வசூல்

தேவகோட்டை ஆக 27

சென்னை அரசாங்கத்தாரால் வசூல் செய்யப்படும் 4சத விகிதக் கடனுக்குத் தேவகோட்டை வட்டாரத்தில் இதுவரை 22லட்சம் ரூபாய் வசூலாகி உள்ளது.

தேவகோட்டை ரெவின்யூ டிவிசனல் அதிகாரி திரு பி செந்தில்நாயகம், தாசில்தார் டி வி அந்தோணி, இன்சுபெக்டர் திரு முத்துத்திருமேனி முதலியோர் அதிகமுயற்சி எடுத்து வசூலிக்கின்றனர்.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-48
துன்முகி-ஆவணி-29
13-9-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## நெய்தல்

*தலைவன் சிறைப்புறமாக வந்திருப்பதை யறிந்த தோழி தலைவியிடம் ஊராரின் அலர்பற்றி அழிந்து கூறியது.*

பிறைவனப் பிழந்த நுதலும் யாழநின், னிறைவரை நில்லா வளையு
மறையா, தூரலர் தூற்றுங் கௌவையு நாணிட், டுரையவற் குறையா
மாயினு மிரைவேட்டுக், கடுஞ்சூழ் வயவோடு கானலெய்தாது, கழனி
யொழிந்த கோடுவாய்ப் பேடைக்கு, முடமுதிர் நாரை கடன்மீ னுய்யு,
மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக், கரப்பவுங் கரப்பவுங் கைம்
மிகக், குரைத்த தோழி யுண்க ணீரே 263 :-இளவெயினனார்

தோழீ! பிறைபோன்ற அழகிழந்த நெற்றியையும் முன்கையளவில் நில்லாது கழலும் வளையையும் மறைவில்லாது நோக்க வந்து ஊரார் அலர்தூற்றும் பழிச்சொல்லையும் நாணத்தினால் நாம் அவருக்குச்சொல்லாது விட்டோமாயினும் இரையை விரும்பிநிறைந்த சூல்கொண்ட வருத்தத்தினாலே கழியை அடையாமல் வயலிலே தங்கியிருந்த வளைந்த வாயையுடைய பெட்டை நாரைக்கு முடமுதிர்ந்த நாரைப்போத்து கடல்மீனைக் கொண்டுவந்து கொடுக்கின்ற மெல்லிய கடற்கரைத் தலைவனைக் கண்டு நாம் மறைக்க மறைக்க நில்லாமல் அளவுகடந்து மையுண்ட நம் கண்ணீரே வெளிவந்து உரைந்துவிட்டது.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதேன் றெண்ணிப்
பிணைமா னினிதுண்ண வேண்டிக்-கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமேன்ப காதலர்
உள்ளம் படர்ந்த நெறி.

:-ஐந்திணையைம்பது-38

உரை :- 'சுனைவாய் - சுனையிலேயுள்ள, சிறுநீரை-குறைந்த நீரை, எய்தா தென்று—போதா தென்று, எண்ணி - நினைத்து. பிணைமான் - பெண்மான், இனிதுண்ணவேண்டி-இனிமையாகப் பருகவேண்டி, கலைமா-ஆண் மான், தன் கள்ளத்தின்-தனது பாசாங்குடன், ஊச்சும்-உறிஞ்சுவதுபோல் பாவனை செய்கின்ற, சுரம் என்ப -சுரம் என்று சொல்லுவார்கள். காதலர்-காதலரது, உள்ம் படர்ந்தநெறி - மனம் சென்ற வழி' என்பதாகும்.

மக்களைப் பெறுகின்றவள் நற்றாய்- வளர்க்கின்றவள் செவிலித்தாய். குழந்தைகள் நற்றாயினும் பார்க்கச் செவிலித் தாயினிடத்துப் பேரன்பு காட்டுவதியல்பு. அன்பு செய்யப்பெறும் செவிலியின் மகள் தோழி. பிறந்த நாட்டோட்டுத் தலைவியும்தோழியும் ஈருடலும் ஓருயிரும்போல் உண்ணும்போதும், உறங்கும் போதும் விளையாடும் போதும், நீராடும்போதும் எந்த நேரத்தும் இணைபிரியாதிருக்கின்றார்கள்.

மங்கைப் பருவமுற்ற தலைவி தோழியருடன் பொழிற் விளையாட்டிற்குச் செல்லுகின்றாள். பொழிலில் தனித்தனியேபிரிந்து பூக்கொய்கின்றார்கள். தலைவி பூப்பறிக்கின்ற இடம் மாதவிப் பந்தரின் பின்னே பிறரறியாத மறைவிடம். பேரழகுடைய இளைஞனொருவன் அவ்வழியே வருகின்றான். தலைவியைக் காண்கின்றான். அவளது அழகுக் கடலில் முழுகிக் கரைசேரமுடியாது கலங்குகின்றான். ஊழ்வினை கூட்ட மங்கையின் மனமும் மாறுபடுகின்றது. இருவ

ரும் ஒன்றி மகிழ்ந்து உவகையுறு கின்றார்கள்.

இன்பத்து மகிழ்ந்த தலைவி, தலைவன் பிரிவுக்கு வருந்துகின்றாள். விரைவில் வந்து தாய் தந்தையரிடம் அறிவித்து மண முடித்துக் கொள்வதாக வாக்களித்துவிடைபெற்றுப் போகிறான் தலைவன். சின்னாட்களில் தோழி செய்தியறிந்து, காதலர்களுக்கு ஒல்லும் வகையிலெல்லாம் துணைசெய்கின்றான். ஒரு நாளில் ஊரறிய மணம் நிகழ்கின்றது. மணமகளுக்குக் கொடுத்த வரிசைகளில் தோழியும் ஒருத்தி.

கற்புமணம் கொண்டு இல்லறத்துப் புகுகின்றனர் இருவரும். தலைவனுக்கும்தலைவிக்கும் இடை நின்று ஆவன செய்து மகிழ்வூட்டி வருகிறாள் தோழி. தலைவன் பெரிய செல்வவரன். முன்னோர் தேடிவைத்தது அச்செல்வம். ஆண்மையுடையார், தாமே பொருள்தேடிச் செலவிடுதல் முறை. இதையுணர்வான் தலைவன். ஆதலின் தலைவியைப் பிரிந்துசென்று பொருளீட்டிவர எண்ணுகின்றான்.

தலைவியிடம் பிரிவைக் கூறினால் அவள் வருந்துவாள். எனவே, தோழியின் உதவியை வேண்டுகின்றான். அவளிடம்அறநெறிமுறைகள் பல உரைத்துத் தனது செலவைத் தலைவிக்கறிவிக்கக் கூறுகின்றான். தோழி பெருஞ் சமர்த்துடையவள். தலைவிக்குத் தக்க சமாதானங் கூறித் தலைவனை விரைவில் திரும்பிவர வேண்டுமென்னும் உறுதியோடு அனுப்புகின்றாள்.

திரும்புதற்குத் தலைவன் குறித்தகாலம் வந்துவிட்டது. அவன் வரவில்லை. ஆற்றாளாகித் தலைவி ஆற்றுகின்றாள். அவளது துன்பத்தை மாற்றுதற்குத் தோழி கூறும் செம்மொழிகள் பெருஞ் சிறப்புடையனவாய் இப் பாடலில் காணப் பெறுகின்றன. தலைவன் பொருளீட்டுதற்குச் குறித்த நகரத்திற்கும் நம்மிடத்திற்கும் இடையேயிருப்பது கொடிய பாலைநிலம். எங்கு பார்த்தாலும் ஒரே வெப்பம் இங்கொன்றும் அங்கொன்றுமாக இலையற்ற மூங்கில்கள் நிற்கின்றன. மணற்பரப்பில் கதிரவன் தனது கதிரைச் செலுத்தி நெருப்பெனச் செய்திருக்கின்றான். இவ்வெஞ்சுரத்தில் எங்கிருந்தோ வழிதவறிஇரண்டு மான்கள்வந்து அகப்பட்டுக் கொண்டன.

வெம்மையாமமற்ற வித்து நீர் வேட்கைகொண்டு, நீர் நிலையை நாடி ஓடியாடி யலேகின்றன. அதோ; அங்கு ஒரு பாறையில் சுனைநீர் காணப்பெறுகின்றது. மான்கள் சுனையை நோக்கி ஓடுகின்றன. ஒன்று ஆண். மற்ருென்று பெண். சுனை யிலிருக்கும் நீரோ வெப்பத்தால் வற்றி ஒருமானின் விடாயை மட்டும் மாற்றும் அளவில் குறைவாயிருக்கிறது காதல்மிகுந்த ஆண் மான், பெண்மானை நீர்குடித்து விடாயாற்றிக் கொள்ள வேண்டுகிறது. பெண்மானோ 'உம் தாகமடங்காத நிலையில் எனது தாகத்தை நீக்கிக்கொள்ள யான் உடன்படேன். நீரே நீரைக் குடித்து விடாயாற்றிக்கொள்ளும்' என்கிறது

அன்புள்ள பெண் மானின் விடாயைத்தவிர்த்தலே ஆண் மானுகிய தனது கடமையென்றெண்ணுகிறது கலைமான். சமயத்தில் யுக்தியொன்று தோன்றப் பெண்மானைநோக்கிச் சுனை நீரை இருவருமாக அருந்துவோம் என்கிறது. பெண்மானுக்குக் கணவனோடு உடனிருந்தும் பேறுகிடைத்தது பற்றி மகிழ்ச்சி. இரண்டுமான்களும் நீரருகே சென்று தண்ணீரை உறிஞ்சிக் குடிக்கின்றன. பெண்மானின் விடாய் தீர்ந்து விட்டது. ஆண்மானின் விடாய் அகலவில்லை. என்ன காரணம்? தனது மனைவி மகிழ்ந்து அருந்துதற்காகத் தன் வாயை நீரில் வைத்து உறிஞ்சிக் குடிப்பது போல் பாவனை செய்ததன்றி ஒருதுளி நீரைக்கூட ஆண்மான் தனது வயிற்றிற் புகுத்தவில்லை.

இத்தகைய பாலைவழியேதான் உன்கணவர் வருவார்! இம்மான்களின் காதற்காட்சியைக் கண்டு வரும் அவர், எவ்வளவு விரைவில் உன்னிடம் வருவார் என்பதை நீயே அறியலாமல்லவா? என்று தோழி தலைவியை ஆற்றுகின்ருள். என்னே தோழியின் சமர்த்து!

---

## மறைஞான சம்பந்தர் விழா

5-9-56 மாலை 6 மணியளவில் மயிலம் மலைமீது அருள்திரு, சிவஞான பாலய அடிகளார் அவர்களின் தலைமையில் 'மறைஞான சம்பந்தர் விழா' கொண்டாடப்பெற்றது. அடிகளார் முன்னுரைக்குப்பின் சி. பா. சு. தமிழ்க்கல்லூரி வித்துவான் மூன்ரும் ஆண்டு மாணவர் ஆ. திருஞானசம்பந்தர், நான்காம் ஆண்டு

பொ. சோமசுந்தரம் இருவரும் சொற்பெருக்காற்றினர். முடிவுரைக்குப்பின் த. பெரியாணடவனுல்(செயலர்) நன்றி நவிலப் பட்டு விழா இறைவாழ்த்துடன் இனிதே முடிவுற்றது.

## சென்னை அரசு ஏற்றது

தேவகோட்டை செப் 3–

தேவகோட்டை மீனுட்சியின் சாரவிநியோக நிலையத்தை நேற்று சென்னை அரசாங்கத்தார் எடுத்துக்கொண்டனர்.

அரசாங்கத்தின் சார்பில் மதுரை, இராமநாதபுரம், நெல்லைப் பகுதிக்குள்ள பாபநாசம் மின்சார இலாகா சூப்பரின்டெண்டிங் எஞ்சினீயர் திரு சி எஸ் ராமையா மேற்படி நிலையத்தைமேற்பார்வையிட்டு நடத்திவரும் 'சேசாயி பிரதர்ஸ். தாபனத்திடமிருந்து பெற்றுக் கொண்டார்.

இந்நிலையம் 1800 உபயோகிப்போர்களைக் கொண்டது. சுமார் 75,000 யூனிட் மின்சாரம் சராசரி விநியோகித்துவந்தது. சென்னை மாநிலத்திலேயே இது முதல் நிலையம் எனவும் தெரிகிறது.

சேசாயி பிரதர்ஸ் சார்பாக நிலையத்தைத் திரு. கே. கே. ராமன் அரசாங்கத்திடம் ஒப்படைத்தார்.

காரைக்குடியில் உள்ள மின்சார நிலையத்தைச் சென்னை அரசாங்கம் சென்ற ஞாயிற்றுக்கிழமை ஏற்றுக்கொண்டது-அரசாங்கததின் சார்பில் பாபநாசம் மின்சார சூப்பரிண்டெண்டிங் எஞ்சினீயர் திரு சி எஸ் ராமையா ஏற்றுக் கொண்டார். மேற்படி நிலையத்தின் சார்பில் திரு எம் எஸ் எம் மெய்யப்பசெட்டியார் நிலையத்தை அரசாங்கத்திடம் ஒப்படைத்தார்.

ஏற்றுக்கொண்ட திரு ராமையாபேசுகையில் 1-10-56ல நாட்டரசன்கோட்டை நிலையமும் 15-11-56ல் காரைக்குடி காத்தான்நிலையமும் எடுத்துக்கொள்ளப்படுவதுடன் இவ்வாண்டு இறுதிக்குள் மதுரை நகரசபை மின்சார நிலையத்தையும் தூத்துக்குடி, திருநெல்வேலி மின்சாரக்கம்பெனியையும் எடுக்கத் திட்டமுள்ளது என்றும் கூறினர்

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

'இம்(தாய்மொழிவழிபாட்டு) முறையையே, சென்ற...300 ஆண்டுகளாக இங்கிலாந்து பின்பற்றி வருகிறது' (17-7-56 தமிழ்நாடு) எனக்கூறிக் களிக்கிறார் அவர். அம்முறையாற்றான் பக்தி பெருகுமென்றும் அவர் சொன்னார். அதனுண்மையை யனுபவத்திற் காண்பதற்கு 300 வருஷகால அளவுபோதும்; அதிகமென்று கூடச் சொல்லலாம். இப்போது அந்நாடு எப்படியிருக்கிறது? இவ் வினவை அவரிடங் கேட்டால் 'உலகிலே இங்கிலாந்துதான் பக்திக்கே எடுத்துக் காட்டா யுள்ளதொரு தேசமாகும். ஆங்கிலேயரனைவரும் பக்தகோடிகளாய்த் திகழ்கின்றனர். பக்திபரவசத்தைஅவரிடந்தான் பார்க்கலாம். அந்நாட்டில் அம்மதக் கோயில்களில் ஏசுநாதர் பிரத்தியக்ஷ மாகிறார். அப்பக்த சிரேட்டர்இந்நாட்டை 150 வருஷங்களாக ஆண்டனர். அவருக்கு அடிமையா யிருக்கப் பெற்றது இந்நாட்டின் பரமபாக்கியம். அதைக்கெடுத்தார் காந்தியார். மிகப்பொல்லாதவர். மீண்டும் அச்சிரேட்டருக்கு இந்நாடு அடிமையாகவேண்டும். அல்லது தாய்மொழி வழிபாட்டாற் பக்த கோடிகளைப் பெருக்கித் தள்ளிய அக்கிறிஸ்தவம் இங்கு வாயு வேகம் மனோவேகத்திற் பரவ வேண்டும். அந்நாள் விரைந்து வருக' என்றெல்லாம் விடை கூறித் தம் விருப்பத்தையும் வெளிப்படுப்பர். ஆனால் இன்னும் அந்நாட்டுநிலை அதுவன்று. பிராகிருதத்தில் தோய்ந்துகிடக்கும்நாடுகளுள் அதுவுமொன்று. இன்னும் 300 வருஷங்கள் சென்றபிறகும் அங்குப் பக்தி குதிரைமுட்டைதான். தாய்மொழி வழிபாட்டாற் பக்திசிறிதும் உண்டாகாது. அதனை அவ்விங்கிலாந்தே மெய்ப்பிக்கும். ஆதிக் கிறிஸ் தவத்தின்பாற் கொண்ட துவேஷத்தின் விளைவாக அவ்விடைக் கிறிஸ் தவந்

தோன்றி அம்மாற்றத்தைச்செய்தது. தன் கடவுளின் வாக்கையும் அதிலுள்ள அர்த்தத்தோடு சேர்த்து மதித்துவருகிற ஆதிக்கிறிஸ்தவத்தில் பிரமசாரிப் பாதிரிகளும், கன்யாஸ்திரீகளும் லக்ஷக்கணக்காக இருக்கின்றனர். எல்லாப் பெருங்கேட்டுக்குங் காரணமாய காமத்தை வெல்வது சுலபமா? அவ்வெல்வி பக்திக் கனுகூலமன்றே? பரம்பரைச் சதாசாரமே அத்தனைக்கும் ஏதுவாதல் திண்ணம். ஆகலின் நவீனர் எடுத்துக்காட்டிய சரித்திரப்பகுதி பலமற்றதாயிற்றென்க.

'தமிழ்மொழி வழிபாடு மிகவும் அவசியமானதாகும். அதனால் மக்களிடத்து வழிபாட்டுணர்ச்சி பெருகுவதுடன், மக்களுக்கு வழிபாட்டில் உளம்கலக்கும்' (17-7-56 தமிழ்நாடு) என்கிறார் விநோபா. நவீனருக்கு அஃதோராதாரம். வந்தவருக்கெல்லாம் முன்றானை விரிப்பது உத்தமஸ்திரீகளின் தருமமன்று. அதுபோல் சைவசாத்திரங்களுக்குக் கட்டுப்பட்டு அச்சமய வரம்புள் நின்று சிவசேவை செய்கிற நெஞ்சுரம் படைத்த சைவமகன் அச்சாத்திர சமய விரோதமான தொன்றை விநோபா வென்ன அவர் தாத்தாவே வந்து சொன்னாலும் அவருக்காக ஏற்றுக்கொள்ளும் அழிகற்பினனாக மாட்டான். விநோபாவும் சந்தர்ப்ப வாதியாகத்தானிருக்கிறார். தமது பூமிதான இயக்கத்துக்கு அவையுந் துணைபுரியுமென அவர் கருதுகின்றனர் போலும். 'எப்பொழுதும் ஆண்டவனின் பெயரையே சொல்லித் துதித்துக்கொண்டு அண்மையிலுள்ளவர்களை ஏமாற்றுகிறவர்கள் ஆஸ்திகர்கள் அல்ல. ஆனால் ஆண்டவனின் பெயரைச்சொல்லித் துதிக்காமல் இதாமக்களிடம் அன்பும் இரக்கமும் காட்டுகிறவர்களே உண்மையான ஆஸ்திகர்கள் ஆவர். ஆண்டவனைக் காப்பாற்றுவதுபற்றி நாம் கவலைப்படாதிருப்போமாக. அவர் தம்மைக் காத்துக்கொள்ளப்போதிய வல்லமை படைத்தவரே' (11-6-56 தினமணி) என்கிறார். ஆத்திகருள் உலுத்தாவார் தமக்கேற்றதொரு புகலைச் சொல்வதுபோல் நாத்திகராவாருந் தமக்கேற்றதொரு புகலைச் சொல்லி எளியரைக் கைவிடுவதுண்டென்பது விநோபாவின் கருத்துமாம்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி ஆவணி-29

## சிவப்பிரகாசர் திருநாள்

கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச சுவாமிகள், அந்தமில் இன்பத்து அழிவில் வீடு பெற்ற நன்னாள் புரட்டாசி மாதத்துப் பௌர்ணிமை நாளாகும். அது, இவ்வாண்டில் **19-9-56** புதன் கிழமை என்பதை நேயர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறோம்-

சுவாமிகளின் அருளுபகாரம், தீஞ்சுவை மிக்க செந்தமிழ்ச் செய்யுட்களாக வெளிப்பட்டு நம்மனோர்க்கு உய்தியை நல்கிக்கொண்டிருக்கின்றது. அவர்களது அருள் வாக்குகளை ஊன்றிக் கற்றவர்கள் ஊற்றமான சமய உணர்ச்சியுடையவர்களாய், நிலைமை-நிலையாமை அறிவு கைவரப்பெற்றவர்களாய்ச் செய்தக்க செய்து, சென்றடையாத திருவை திளிதிற் பெறத்தக்க வாய்ப்பைப் பெற்று இன்புறுவார்களென்பது உறுதி.

சுவாமிகளது அருள்நூல்களில் சமய குரவர்களைத் தலைவர்களாகக் கொண்ட நால்வர் நான்மணி மாலையை நாடோறும் பாராயணம் செய்து வருபவர்களுக்குச் சித்தாந்த முத்தி எளிதிற் கைகூடும்.

அவர்களது சோணசைலமாலை, பள்ளிச்சிறுர்களுக்குப் பரம்பொரு

ளுண்மையைத் தெளிவுறுத்துவது. நன்னெறி முதலியநீதி நூல்களோடு சதமணிமாலை முதலிய ஞானநூல் களையும் அருளி மக்களனைவருக்கும் வாழ்வுதந்த பெருமைசுவாமிகளுக்கு உண்டு.

மயிலம் ஆதீன கர்த்தரான சிவ ஞான பாலய தேசிக மூர்த்திகளின் அருளுபதேசத்தால் தாமும் இன்புற்று, நம்மையும் இன்புறவைத்த சுவாமிகள், ஆசாரியரைத் தலைவராகக்கொண்ட ஐந்து நூல்களை இயற்றினார்கள்என்று அறிகிறோம்.

குமாரகுருபர சுவாமிகளின் மாணவரான வெள்ளியம்பலவாண முனிவர் மதித்த, நன்மாணவர் சுவாமிகள் ஒருவரேயாவார். இப் பெருந்தகையாரது திருவருள் நம் பால் என்றும் இருப்பதாக!

---

# நிரம்ப அழகியதேசிகர்

சைவஆதீனங்கள் பதினெட்டனுள் ஒன்றாக விளங்குகின்ற துலாவூர் ஆதீன ஸ்தாபகர், நிரம்ப அழகிய தேசிக மூர்த்திகள் ஆவார்கள். தனவணிகநாட்டு நடுநாயகமாக விளங்குகின்ற குன்றக்குடித் திருத்தலத்திற்கு வடபால் துலாவூர்ப்பதி விளங்குகின்றது.

இங்குள்ள குருபீடத்தில் நிரம்ப அழகிய மூர்த்திகளின் வழித் தோன்றல்கள் வழிவழியாய் அமர்ந்து சீடர்களுக்குச் சிவ தீட்சைப்பேற்றை நல்கி வருகிறார்கள்.

நாட்டுக்கோட்டை நகரமக்களாகிய தனவணிகர்கள் தங்கள்பெண் மணிகளுக்குத் தீட்சாகுருவாகத் துலாவூர் ஆதீன கர்த்தரையே தோன்றுதொட்டு ஏற்றுக்கொண்டு ஒழுகி வருகிறார்கள்.

சைவநூல்கள் சிலவற்றின் ஆசிரியராகவும் தீட்சாகுருவாகவும் விளங்கி ஆதீனத்தை நிறுவிய இப் பெருந்தகையாரின் குருபூசைநாள் புரட்டாசி மாதத்துக் கிருட்டின பட்சத்துப்பிரதமையாகிய **20-9-56** வியாழக்கிழமையாகும்.

---

# பிள்ளையார்நோன்பு எப்பொழுது?

இட்டமொழி சிவசூரியநாராயணபிள்ளை

சைவ சமயிகளின் உள்ளத்தில் 'பிள்ளையார்நோன்பு நாள்' நடப்பு வருஷத்தில் திருக்கார்த்திகைக்குப்பின்பு இருபத்தோராவது நாளாகிய கார்த்திகை 23 (8-12-56)ல்தான் என்ற உணர்ச்சி ஊற்றாய் உற்பத்தி ஆகிவிட்டதென்பதைச் சைவப் பஞ்சாங்கக்கணிதர் உட்பட்ட திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தாரும் உணர்தற்காக 23.8-56 செட்டிநாடு வார இதழில் 'பிள்ளையார் நோன்பு எப்பொழுது?' என்ற தலையங்கம் மிகமிகச் சிறப்பாய் வெளியாகியிருக்கின்றது. இதனைக் கண்டபின்னரேனும் சைவப் பஞ்சாங்கச்சாரார் சிவபெருமானைக குறித்தனவும் அவரின் வேறல்லாத தேவியார், மூத்தபிள்ளையார், முருகவேளாதியோரைக் குறித்தனவுமான நோன்புகளைச் சூதும்வாதும்தொடர்பு கொள்ளாவண்ணம் உள்ளதை உள்ளவாறே சைவப் பஞ்சாங்கத்திற் குறிப்பார்களேயானால் அவர்கள் வெளியிடும் பஞ்சாங்கத்தைச் சைவப் பஞ்சாங்கம் என எவரும் எண்ணுவர். அதற்கு அதன் கணிதர் இ. மு. சுப்பிரமணியபிள்ளையின் சம்மதம் வேண்டும்- ஆனால் அவர் குடிஅரசுப் பத்திரிகை நடந்த கோலக்காலத்தில் அதன் இதழ்களில் சந்திரசேகரப் பாவலர் என்ற பெயருள்மறைந்துஇராமாயணத்தை ஆபாசம் செய்தவர். 1951 காவருஷத்தில் சி. சாமிநாத ஜோதிடர் என்ற பெயருள் அவர் (இ-மு-சு) மறைந்து வள்ளுவர் பஞ்சாங்கம் என்ற ஒன்றில் வள்ளுவர் குருபூசையை மாற்றி அமைத்தவர். 1955 மன்மதவருஷத்தில் திருநெல்வேலிப் பாலம் மெஸ்ஸர்ஸ் எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை வகையினர் ஆதரவால் பிரபல ஜோஸ்யர் என்றபட்டத்துள் அவர் மறைந்து திருநெல்வேலி வாக்கியப் பஞ்சாங்கம் என்ற மற்றொன்றில் ஐப்பசிக் கரிநாளாம் 6ந் தேதியில் சுபமுகூர்த்தம் குறித்தவர். அதே முகூர்த்தத்தைச் சைவப் பஞ்சாங்கத்திலும் குறித்திருந்தவர். நடப்புத் துன்

முகிவருஷத்திலும் (கணிதர் பெயர் எதுவும் இல்லாது) மேற்கண்டவர் ஆதரவால் வெளிவந்திருக்கும் திருநெல்வேலி வாக்கியப்பஞ்சாங்கத்தில் அவர் (இ-மு-சு) மறைந்து மார்கழி மாதம் 24உ (7-1-57)ல்விநாயக சஷ்டி என்று குறித்திருப்பவர். சைவப் பஞ்சாங்கத்தில் மார்கழி மாதம் 23உ (6-1–57)ல் பிள்ளையார்சட்டி என்று குறித்தவரும் அவரே. அவர் விரத விவாதம் உண்டுபண்ணவே அவதரித்தவர் என்பதை யாவரும் அறிவர்.

'கனவினு மின்னாது மன்னோ வினைவேறு, சொல்வேறு பட்டார் தொடர்பு' என்பதற்கேற்ப அவர் குறிக்கும் விரதகாலக் குறிப்புகளைப் புறக்கணித்தலே பொருத்தமாகும்.

சுபம்-சுபமேயாகுக.




கொத்தமங்கலம் திரு சி ராம மு லெ லெட்சுமணன் செட்டியாரவர்கள் பேத்தியும் பெரியணன் செட்டியார் புதல்வியுமான செல்வி மீனாட்சிக்கும் நேமத்தான்பட்டி அப்பரில்லம் திரு, பழ னா நாராயணன் செட்டியாரவர்கள் புதல்வன் திருநாவுக்கரசுக்கும் 7-9-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. மணமக்கள் மக்களொடு மகிழ்ந்து மனையறங்காத்து நெடிது வாழ ஆண்டவனை வேண்டுகிறோம்.

கண்டரமாணிக்கம் திரு செ சி நா லெ அழகுசுந்தரம்செட்டியாரவர்களின் தம்பியார் திரு, நாராயணன் செட்டியாரவர்களின் மக்களும், திரு கரு முத்து தியாகராசச் செட்டியாரவர்களின் பெண் வயிற்றுப் பேரர்களுமாகிய செல்வி விசாலாட்சி செல்வன் லெட்சுமணன் ஆகிய இருவருக்கும் 9-9-56ல் காப்புக்கட்டுப்புதுமை சிறப்பாக நடைபெற்றது. குழந்தைகள் அறிவுந் திருவும்பெற்று நீண்ட ஆயுளுடன்வாழ இறைவனை இறைஞ்சுகிறோம்

## சிவபோகசாரம்:

"ஆசையறாய் பாசம்விடாய்
ஆனசிவ பூசைபண்ணாய், நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்-சீசீ. சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய், மனமே உனக்கென்ன மாண்பு."

## செங்கோல் ஆதீனம்

பெருங்குளம் 2-

இன்று காலை 8 மணிக்குத் தேவார பாடசாலை மாணவ மாணவிகளின் திருமுறை பாராயணத்துடன் வீதிவலம் வந்து திருமடத்தில் பூஜாமூர்த்தியான அழகிய திருச்சிற்றம்பலவர் திருமுன்பில் சிவபுராண பாராயணம் நடைபெற்றது.

மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ வைகுண்டம் வட்டம் பள்ளி ஆய்வர் திருவாளர் க குருசாமி தேசிகர் அவர்கள் தலைமையில் பேரவை தொடங்கியது- மாணவ மாணவிகள் கும்மி கோலாட்டம் நிகழ்த்தினர்கள். மாணவி எஸ் கோமதி ஆதீன குரு பரம்பரை வரலாறு பற்றியும் டி. கோமதி எஸ் கோமதி ஆகிய இருவரும் சைவ வினா விடை சம்பாஷணையும் சிதம்பரம் சூரிய நாராயணன் உருவ வழிபாடு பற்றியும் உரையாடல் நிகழ்த்தினர்கள்.

தலைவர் மாணவமாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கியபின் போஸ்டுமாஸ்டர் ஸ்ரீனிவாசஅய்யர் அய்யாத்துரை அய்யங்கார் ஆதீனம் உயர்தர ஆரம்பப்பாடசாலையின் தலைமைஆசிரியர் பிரமநாயக முதலியார் பால சுப்பிரமணியன் ஆதீன வித்துவான் முதலியவர்கள அரிய கருத்துக்கள்அடங்கிய சமயச் சொற்பொழிவாற்றினர்கள்.

ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் ஆறுமுக சுந்தர சத்திய ஞான பரமாசாரிய சுவாமிகள் ஆசி வழங்குகையில் சமய உண்மைகளைத் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்துகொடுக்கவும் தேவையுள்ள பொழுதெல்லாம் சமயப் பிரசாரகர்களின் மூலமாகச்சமய உண்மைகளை எடுத்து மக்களுக்குக்கூறி நால்வர்கள் வகுத்த நெறியில் நடத்தி வைக்கவும் எண்ணுகிறோம் என்றும் வீதி எல்லாம் தெய்வத் திருமுறைகள் இன்னிசையால் ஒலிக்கும் காலம் அதிவிரைவில் வரப்போகிறதென்றும் சமய அன்பர்களும் குழந்தைகளும் சமயஉண்மைகளைத்தெரிந்துகொள்ள முன்வருவார்களென நம்புவதாகவும் கூறினர்கள். தலைவர்முடிப்புரையும் ஆதீனவித்துவான் வந்தனோபசாரமும் கூறப் பாடசாலை ஆசிரியர் திருஞான சம்பந்த ஓதுவார்மூர்த்தி திருப்புகழ் பாடக்கூட்டம் இனிது முடிவு பெற்றது

## யாத்திரைப்பரிசு

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீ ல ஸ்ரீ காசி வா சி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், டாக்டர் உ வே சுவாமிநாதையர் நினைவு சென்னை ஹைஸ்கூல் மாணவிகள் திருக்கழுக்குன்ற யாத்திரைப் பரிசுநிதி ஒன்றை நிறுவியுள்ளார்கள். இதற்குரிய மூலதனம் ரூ3000, 3 சதவிகிதம் கடன் பத்திரங்களில் முதலீடுசெய்யப்பெற்றுள்ளது.

சென்னை நகர எல்லைக்குட்பட்ட எல்லாப் பள்ளிகளிலும் எஸ் எஸ் எல் சி வகுப்பிற் பயிலும் மாணவிகள் சகலகலாவல்லிமாலை, திருவாசகம், திருக்கழுக்குன்றப் பதிகங்களில் ஒவ்வோராண்டும் நவம்பர் அல்லது டிசம்பரில்நடத்தப்பெறும்வாய்மொழி எழுத்துத் தேர்வுகளுக்கு ஆஜராகலாம். வெற்றிபெறும் முதல் ஐந்து மாணவிகளுக்கு ரூ 10 வீதம் 5பரிசுகளும் திருக்கழுக்குன்ற யாத்திரைச் செலவும் அளிக்கப்பெறும். இந் நிதியின் பரிபாலகர் சென்னைப் பெண் பள்ளிகளின் இன்ஸ்பெக்ட்ரஸ் ஆவார்கள்.

——

## படித்தோம்!

தமிழில் தந்தி: ஆக்கியோர்: அ சிவலிங்கம். கிடைக்குமிடம்: அ சிவலிங்கம் 26/276c செல்வபுரம். கோயம்புத்தூர் விலை: அணா 4

தமிழகத்தில் தமிழ் மட்டும் படித்தவர்களுக்குத்தந்திவந்தால் ஆங்கிலம் படித்தவரைத் தேடிப் போகிறவேலை தொடக்க நாளிலிருந்து இருந்துவருகிறது.தமிழ்ச் சொற்களை ஆங்கில எழுத்துக்களில்(ருமானியமுறை) எழுதுகின்ற முறை இங்குக் கையாளப் படுகின்றதென்றாலும் அதில்சில வேளைகளில் பெரிய தடுமாற்றம் ஏற்படவும் இடமுண்டென்பதை யாரும்மறுக்கமுடியாது.

இந்நூலாசிரியர், தமது அறிவையும் அநுபவத்தையும் கொண்டு பலகாலும் நுணுகி ஆராய்ந்து தமிழ்நெடுங் கணக்கிலுள்ள 247 எழுத்துக்களையும் 37 ஒலிக் குறிகளில் அடக்கித் தமிழ்த்தந்திமுறையைப் புதிதாகக்கண்டுபிடித்து வெளியிட்டுள்ளார்இவரதுமுயற்சிபெரிதும் பாராட்டுதற் குரியதாகும்

# ஜனாதிபதிப் பதவி

'நீ ஒரு நாள் ஜனாதிபதியாஞலும் ஆகலாம்' என்று தம் பிள்ளைகள் நன்ருக நடந்துகொள்வதற்கு அமெரிக்கப் பெற்ருேர்கள் தலைமுறை தலைமுறையாக ஊக்கமளித்து வருகின்றனர்.

இத்தகைய சொல் அரைகுறை அக்கரையோடு சொல்லப்படுவது தான்; ஆயினும் இக்கனவு நனவாகக் கூடுமென்பதற்கு எப்பொழுதும வரய்ப்பு இருக்கின்றது. மிக எளிய நிலையிலிருந்து நாட்டின் மிகவும் பெரிய பதவிக்கு வரும் சந்தர்ப்பம் அமெரிக்க வரலாற்றில் எப்போதும் வழக்கமானதொன்ருகும்.

ஜனாதிபதிப் பதவிக்கு வந்துள்ள 34 அமெரிக்கரின் வாழ்க்கை வரலாறுகளும், வெற்றியடைவதற்கு நிதியோ சமூக அந்தஸ்தோ அவசிய மில்லை என்பதையும் அமெரிக்க மக்கள் தங்கள் தலைவர்களை அவர்களின் தகுதியைப் பொறுத்தே தேர்ந்தெடுக்கின்றனர் என்பதையும் அது அவர்களுக்குமூதாதையரிடமிருந்து கிடைத்துள்ள அந்தஸ்தைப் பொறுத்தது அல்ல என்பதையும் எடுத்துக் காட்டுகின்றன.

மற்றைத் துறைகளிலுள்ள தலைவர்களைப்போலவே ஜனாதிபதிகளின் வாழ்க்கைகளும் அமெரிக்க வாழ்க்கை முறையின் பலதரப்பட்ட அமைப்புகளை எடுத்துக் காட்டுகின்றன. விவசாயிகளும், வக்கீல்களும், ஆசிரியர்களும், ராணுவத்தினரும் பத்திரிகையாளர்களும் இப்பதவிக்கு வந்துள்ளனர். பல ஜனாதிபதிகள் கல்லூரிப்பட்டதாரிகள். சிலர் ஏழையாக இருந்து, பள்ளிக்கூடக் கட்டணமளிக்கப் படிக்கும்போதே வேலையும்செய்ய வேண்டியிருந்தவர்கள்.

பாமர மக்களிடையிலிருந்து ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் பழக்கம் அமெரிக்கக் குடியரசு ஏற்பட்டதிலிருந்து தொடங்கவில்லை. முதலாவது பல ஜனாதிபதிகள் பழங் காலத்தில் குடி

புகுந்த பணக்காரக் குடும்பங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். ஏனெனில் சுதந்திரம், பிறர் ஆதிக்கம் அற்ற நிலையைப் பெறுவதற்காக நடந்த போராட்டத்தில் தலைவர்களை அளித்தசமூகப்பிரிவு இதுவே.

பிறகு இப்போக்கு மாறி, பல ஜனாதிபதிகள் குறைந்தவருமான மத்தியதர வருமானப் பிரிவுகளைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். பணக்காரர் இப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படுவது மிக அபூர்வமாகும்- ஹெர்பர்ட் ஹூவர் இத்தகைய பிரிவைச் சேர்ந்தவர் ஆவார். ஆனால்அவர் கருமான் மகனாக வறுமைக்குடும்பத்தில் பிறந்தவர்; ஒரு சுரங்க என்ஜினியராகப் பெருஞ் செல்வம் சம்பாதித்தவர்.

ஜனாதிபதி ஐஸன்ஹாவரின் பெற்றோரும் எளியவர்களே. ஏழுபிள்ளைகளில் ஒருவராகப் பிறந்த இவர் தம்பெற்றோர்கள் டெக்ஸாஸிலிருந்து கான்ஸாஸுக்கு வந்தபொழுது ஒரு குழந்தையாக இருந்தார். அவருடைய தகப்பனார் அங்கு பால் ஏடு எடுக்கும் உற்பத்திச்சாலையில்வேலை செய்துவந்தார்.

ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குமுன் ஹாரி எஸ். ட்ரூமன் ரயில்வே டைம்கீப்பர், மருந்துக்கடைக் குமாஸ்தா, பாங்கு உதவியாளர் ஆகிய பல துறைகளில் வேலை செய்தவர். முதலாவது உலகயுத்தம் நடைபெற்றபொழுது அவர் வெளிநாடுகளில் சேவை செய்தார். பிறகு ஒரு ஆண் உடைகள் கடையை நடத்தினர். குடும்பப் பண்ணையிலும் வேலைசெய்தார். மிஸூரியில்பல அலுவலகங்களில்வேலைசெய்து, சட்டம்பயின்று, 1934ல் அமெரிக்கசெனட்சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகுதான் தேசீயத் தலைமைப் பதவி அவருக்குக் கிடைத்தது.

கால்வின் கலிட்ஸ் தம் பாட்டனாரின் பொதுமளிகைக் கடைக்கருகே ஒரு சிறு குடிசையில் பிறந்தவர். அவரும் எளிய நிலைமையிலுள்ள குடும்பத்தில்தான் வாழ்க்கையை ஆரம்பித்தார்.

(தொடரும்)

## தங்கம், வெள்ளி

மதுரை — செப் 11

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 103 | 10 | 0 |
| சவரன் | 68 | 6 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 66 | 8 | 0 |
| வெள்ளி 100தோலா | 176 | 8 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 | 0 |

## பாராட்டு

பர்மாவில் தமிழர் மாநாட்டில் கலந்துகொண்டு தாய்நாடு திரும்பிய செந்தமிழ்ச் செல்வர் திரு, ம. பொ. சிவஞானகிராமணியாருக்கு கல்கத்தாவில் அருள்நெறித் திருக்கூட்டத்தினர் (29-8-56) மாலை தேசிய உயர்நிலைப்பள்ளியில் தலைவர் திரு, ந. சிங்காரம் தலைமையில் வரவற்பளித்துப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர். தலைவர் பேசுகையில் அண்மையில் திரு, ம. பொ. சி. 50 ஆண்டு எய்தியபோது தமிழ்நாட்டில் திரு, குன்றக்குடி அடிகளார் பொன்னாடைபோர்த்திக் கௌரவித்ததை ஒட்டி இந்நகர் அருள்நெறித் திருச்கூட்டத்தினர் பொன்னாடைபோர்த்துவது மிகவும் பொருத்தமானது என்று குறிப்பிட்டார். கவிஞர் அரங்க சீனிவாசன் 50 ஆண்டு எய்திய ம. பொ. சிக்கு 50 வரிகள் அடங்கிய வாழ்த்துப்பா ஒன்றுஇயற்றி அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பாகப்பாடி அளித்தார். பின்னர் காரியதரிசி மா. கருப்பையா அருள்நெறித்திருக்கூட்டத்தின் தோற்றம், நோக்கம், தொண்டுகள் பற்றிய அறிக்கையொன்றைப் படித்தார்.

திரு, ம. பொ. சி பேசுகையில் 'அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் கௌரவிக்கப்பட்டதைப் பெருமையாகக் கருதுவதாகவும் அருள்நெறித் தொண்டர்கள் சர்வசமயத்துக்கும்உறவு காணும் பொது நோக்குடன் பாடுபட வேண்டும என்றும், இன்று சமயத்தில் பாமரருக்கு அறிவூட்டவும் பாடுபட்டால் நாத்திகம் வளர்வதற்குச் சந்தர்ப்பம் இருக்காது என்றும் உலகம் இன்றுள்ள சூழ்நிலையில் மதச் சண்டைகளுக்கு இடமேஇல்லை. என்றும் எல்லா மதங்களும் ஒப்புக்கொண்டுள்ள அடிப்படைத் தர்மங்களை மக்களிடையே பரப்பினுல் போலிநாத்திகம் தொலைந்து, உண்மையான அருள்நெறி உலகில் நிலைக்கும் என்றும் கூறினர்.

திரு, குன்றக்குடி அடிகளாரிடமிருந்து வந்த வாழ்த்துக் கடிதம் வாசிக்கப்பட்டது. காரியதரிசி திரு. மா. கருப்பையா நன்றிகூற விழா இனிது நிறைவேறியது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.